# செந்தமிழ்ச் செல்வி

ACC-NO-38099

உள்ளுறை




சிலம்பு-௫௨] வள்ளுவர் ஆண்டு ௨௦௦௮ ஐப்பசி. (Nov. 77) [பரல்-௩

# மறைமலையடிகள் நூல்நிலையத்திற்குத் தமிழக ஆளுநர் வருகை புரிதல்
(10 — 11 — 1977)



நூலகர் கொடுத்த அரிய நூலைப் பார்வையிடுதல்



பார்வையாளர் ஏட்டில் பாராட்டினை எழுதுதல்

# செந்தமிழ்ச் செல்வி

## திங்கள் வெளியீடு

| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு உ௦௦அ, ஐப்பசி | பரல் |
|---|---|---|
| ருஉ | நவம்பர் 1977 | ந |


## சிற்றிலக்கியப் பாதுகாப்புத் திட்டம்

உலகின் முதற் செம்மொழியாகிய நமது அருமைச் செந்தமிழின் இலக்கண இலக்கிய வளம் அளவிடற்பாலதன்று. ஆயினும் கடற்கோள் முதலிய இயற்கை ஊறுபாடுகளாலும், நம் தமிழ் மக்களின் பொறுப்பற்ற போக்கினுலும், அயலவர் தம விரகாண்மையாலும், ஆட்சிமாற்றங்களால் நிகழ்ந்த அலைக் கழிவுகளாலும் அழிந்துபட்டனவும் அழிக்கப்பட்டனவும் போக எஞ்சியவையே இன்று நம் கைக்குக் கிட்டியுள்ளன வென்பது யாவரும் அறிந்ததே.

தமிழ் இலக்கிய வகைகளுள் சிற்றிலக்கியம் என்பதும் ஒன்று. இப் பிரிவின 96 வகை நூல்கள் என்பர். எனினும் இவை தம்மை முறைப்பட ஆராய்ந்த புலவர் மதுரை இளங்குமரனுர் அவர்கள் சிற்றிலக்கியங்கள் 96 வகை என்னும் வரையறை பொருந்தாதென்றும், இதுகாறும் 287 வகையான சிற்றிலக்கியங்கள் கிடைத்துள்ளனவென்றும் குறிப்பிட்டு அவற்றுக்கு அகரவரிசைப்படுத்தப்பட்ட பட்டியல் ஒன்றும் வெளியிட்டுள்ளார்.* அறிஞர் உலகம் இதுபற்றி மேலும் ஆராய்ந்து ஒருதலையான முடிபு காணுதல் வேண்டும்.

தாய்மார்களின் வாய்மொழி இலக்கியங்களான தாலாட்டு, ஒப்பாரி ஆகியன தமிழினத்துக்கே யுரிய தனிச்சிறப்பு வாய்ந்தனவாகும். மற்ற மொழிகளிலும் ஏனையினத்தாரிடையேயும் குழந்தைப் பாடல்களும் இரங்கற்பாக்களும் உள்ளனவேயன்றித் தமிழ்த் தாய்மார்கள் இயல்பாகத் தாமே இசைகூட்டிப்பாடும்

* செந்தமிழ்ச் செல்வி-சிலம்பு : 50; பக்கம் : 283.

தாலாட்டு, ஒப்பாரி போல்வன இல்லை யென்பது குறிப்பிடத் தக்கது.

சிற்றிலக்கியங்கள் பெரும்பாலும் திருக்கோயில்கள், இறைவன் திருவிளையாடல்கள், பேரரசர்கள், குறுநில மன்னர்கள், புலவர் பெருமக்கள், தொழில்கள், விளையாட்டுகள், போர்கள், வாழ்க்கையில் பல்வேறு சிறப்பு நிகழ்ச்சிகள் முதலிய பலப்பல அடிப்படைகளில் தோன்றியுள்ளன. இவற்றினுலெல்லாம் தமிழ்நாட்டின் வரலாறு, பெருமக்கள் வரலாறு, வழிபாட்டு முறைகள், போர் நிகழ்ச்சிகள். நாகரிகம் பண்பாடு பழக்க வழக்கங்களும், மற்றும் மரபுகள், கலைச்சொற்கள், உவமைகள், பழமொழிகள், அடுக்குச் சொற்கள் முதலியனவும் பிறவுமான அளவிலாச் செய்திகள் அறியக்கிடக்கின்றன.

குமரகுருபர அடிகள் அருளிய பதினுன்கு நூல்களும் அப் பெருமான் நிறுவிய திருப்பனசை மடவளாகத்தினரால் 'குமர குருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு' என்னும் பெயரில் வெளியிடப்பட்டுள்ளன. சிவப்பிரகாச அடிகள் அருளிய நூல்களில் கிடைக்கப்பெருத ஏசுமத நிராகரணம், திருவெங்கையலங்காரம், தலவெண்பா ஆகியன தவிர ஏனையவை 'சிவப்பிரகாசர் பிரபந் தத்திரட்டு' என்னும் பெயரில் சிதம்பரம் ஈசானிய மடம் இராம லிங்க அடிகளாலும். 'சிவப்பிரகாசர் பனுவல் திரட்டு' என்னும் பெயரில் நம் கழகததினுலும், 'சிவப்பிரகாசர் செந்தமிழ் நூல்கள்' என்னும் பெயரில் திருமயிலம் மடவளாகத்தினராலும் வெளியிடப்பட்டுள்ளன. திரிசிரபுரம் பெரும்புலவர் மீனுட்சிசுந்தரனுர் இயற்றியருளிய சிற்றிலக்கியங்கள் பல பர். உ. வே. சா. அவர்களால் 'ஸ்ரீ மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் பிரபந்தத் திரட்டு' என்னும் பெயரில் வெளியிடப்பட்டுள்ளன. அவ்வாறே 'சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தத் திரட்டு'ம் மாம்பழக் கவிச்சிங்க நாவலர் பிரபந்தத்திரட்டும் வெளிவந்துள்ளன.

கழகம் பிள்ளைத்தமிழ்க் கொத்து, அந்தாதி உரைநூற் கொத்து, தூது உரைநூற் கொத்து, மூவருலா ஆகிய சிற்றிலக்கியத் தொகுப்பு நூல்களையும் மற்றும் பல தனி நூல்களையும் வெளியிட்டுள்ளது. அன்றியும் 1958 ஆம் ஆண்டு முதல் ஆறு சிற்றிலக்கிய மாநாடுகள் நடத்தி அவற்றில் உலா, கலம்பகம், தூது, பிள்ளைத்தமிழ், பரணி, பள்ளு, குறவஞ்சி, கோவை, அந்தாதி, வெண்பா ஆகிய பத்து வகைப்பட்ட தொண்ணூறு நூல்களைப் பற்றித் தமிழறிஞர் பெருமக்கள் எழுபத்தைந்து பேர் நிகழ்த்திய ஆராய்ச்சிச் சொற்பொழிவுகளை நூல்வடிவாக்கி ஆறு தொகுதிகளாக வெளியிட்டுள்ளது.

பழந்தமிழ்க் கழக இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள ஆற்றுப்படை முதலியவற்றையும், திருமுறைகள், மெய்கண்ட நூல்களில் இடம்பெற்றுள்ள திருச்சிற்றம்பலக் கோவையார், நெஞ்சுவிடுதூது முதலியவற்றையும் கலிங்கத்துப்பரணி, தமிழ் விடுதூது முதலியவற்றையும் பிறவற்றையும் பயின்றவர்கள் சிற்றிலக்கியப் பயன்கள் குறித்து யாம் மேலே கூறிய உண்மையை நன்கு அறிவர்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த எண்ணற்ற சிற்றிலக்கியங்கள் பல இப்போது செம்மையாகக் கிடைக்கப்பெறவில்லை. ஆங்காங்குச் சிற்சிலர் வெளியிட்டவை கிடைப்பது அரிதாக உள்ளது. அரிதிற்கிடைப்பன பெரும்பாலானவை செவ்வையான முறையிற் பதிப்பிக்கப்படாதனவாகவும், சிதைவுபட்டனவாகவும் உள்ளன. மற்றுஞ்சில அச்சிடப்பெறாமல் ஏட்டுச்சுவடி வடிவிலேயே உள்ளன.

நூல்கள் எவ்வகையினவாயினும் அவையெல்லாம் அறிவு ஆராய்ச்சிகளுக்குப் பயன்படும் திறத்தன வென்பது உறுதி. எனவே, அவை செம்மையான முறையில் பாதுகாக்கப்படல் வேண்டும்; பயிலுவோர்க்குப் பரவலாகக் கிடைத்தல் வேண்டும். இதில் கருத்து வேறுபாட்டுக்கு இடமில்லை.

அரும்பெருந் தமிழ் நூல்கள் பலவற்றை அரிதின் முயன்று அச்சிட்டு வெளிப்படுத்தி அழியாப் புகழ்கொண்ட பெரும் பேராசிரியர், பர். உ. வே. சா. அவர்கள் சிற்றிலக்கியங்களை முறையாக வெளியிடத் திட்டமிட்டிருந்தனர். அது பற்றி 28-1-1937 ஆம் நாளிட்ட அறிக்கை ஒன்று தியாகராச விலாசத்தினின்றும் வெளியிடப்பட்டுள்ளது. அதன்கண் தமிழ்த் தாத்தா அவர்கள் பல இடங்களில் அரிதின் முயன்று தொகுத்த ஏட்டுச்சுவடிகள் பல செப்பஞ் செய்யப்பட்டு வெளியிடுவதற்கு ஏற்பாக இருப்பதாகவும், அவற்றை மாதத்திற்கொரு நூலாக முறையே வெளியிட விருப்பதாகவும், குறைந்த பக்கம் 500 பேர் ஓர் உருபா முன் பணம் செலுத்திப் பதிவுசெய்து கொள்ளுவார்களாயின் அம் முயற்சி எளிதில் நிறைவேறும் என்றும், அங்ஙனம் பதிவு செய்து கொண்டவர்களுக்கு மட்டும் 25% குறைந்த விலையில் அந் நூல்கள் கொடுக்கப்படும் என்றும், வெளியிட அணியமாக (தயாராக) உள்ளவை; கோவைகள், உலாக்கள், தூதுகள், பிள்ளைத் தமிழ்கள், குறவஞ்சிகள், பள்ளுகள், சிலேடை வெண்பாக்கள், இரட்டைமணிமாலைகள், கலம்பகங்கள், சதகங்கள், சிறுகாப்பியங்கள், தலபுராணங்கள் முதலியனவா மென்றும், யாவும் ஏற்புற அமையின் ஈசுவர ஆண்டு, சித்திரை மாதம் முதல் அவை வெளியிடப்படும் என்றும், இசையும் அன்பர்கள்

1937 மார்ச்சு 15க்குள் பணம் அனுப்பிப் பதிவு செய்துகொள்ளல் வேண்டும் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன.

இத் திட்டம் நிறைவேறி யிருப்பின் எத்தனையோ சிற்றிலக்கியங்கள் செவ்விய அமைப்புடன் வெளிவந்திருக்கும். ஆனால் நிறைவேறவில்லை. அது தமிழ் நாட்டின் போகூழே யாகும்.

தமிழ் நூல்களுக்கு நிலைக்களமாக விளங்கும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் உயர்திரு உ. வே. சா. அவர்களின் எண்ணத்தை நிறைவேற்றும் வகையிலும், தமிழ் நூல்களைப் பாதுகாத்தலும் பரவுவித்தலும் செய்யுமுகமாகவும் இச் சிற்றிலக்கியப் பாதுகாப்புத் திட்டத்தைத் தீட்டியுள்ளது.

இதுகாறும் கழக வாயிலாய் சிற்றிலக்கியங்கள் பலப்பல வெளிவந்துள்ளன. இன்னும் வெளிவர வேண்டியனவும் பலவுள. அவை மறைமலையடிகள் நூல்நிலையத்தில் பேணி வைக்கப்பட்டுள்ளன. அறிஞர்கட்கு அமுதசுரபியாக விளங்கும் இவ்விழுமிய நூல்நிலையமும் கழக நூல் வெளியீட்டுக்கென்றே சிறப்புற இயங்கிவரும் அப்பர் அச்சகமும் இருத்தலின் அம்மை யம்பலவாணர் திருவருளால் இத்திட்டம் இனிது நிறைவேறும் என்பது உறுதி.

## திட்டத்தின் நெறிமுறைகள்

(க) சிற்றிலக்கியங்கள் யாவும் கழகத்தின் வழிச் செம்மையான முறையில் அச்சிட்டு வெளியிடப் பெறும்.

(உ) திட்டத்தில் பங்குகொள்ள விரும்புவோர் உரு 25/= (இருபத்தைந்து) முன்பணமாகச் செலுத்தி உறுப்பினராகப் பதிவுசெய்து கொள்ளுதல் வேண்டும்.

(ங) பதிவு செய்துகொண்ட உறுப்பினர்கட்கு நூல்கள் விலையில் 25/- கழிவுசெய்து கொடுக்கப்படும்.

(ச) குறைந்த அளவு 300 பேரேனும் உறுப்பினராக முன் பணம் செலுத்திப் பதிவு செய்துகொண்ட பின்னரே திட்டம் செயற்படத் தொடங்கும்.

(ரு) தொகை முடிந்தவுடன் மீண்டும் தொகை செலுத்தி உறுப்பினர்கள் தமது உறுப்பாண்மையை நீட்டித்துக் கொள்ளல் வேண்டும்.

தமிழ்ப் பெருமக்கள் இத் திட்டத்தைப் பயன்படுத்திக் கொண்டு தமிழ் வளர்ச்சிக்கு ஒத்துழைத்துச் சிறப்புறுமாறு வேண்டுகிறோம்.

இன்னணம்

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# சிவஞானபோத ஆராய்ச்சி

[அருட்டிரு அழகரடிகள்]

(சிலம்பு ௩௨, பரல் ௨, பக்கம் ௭௨இன் தொடர்ச்சி)

'மனமாதி' என்று எல்லா அகக் கருவிகளையும் இச் செய்யுள் குறிப்பதனுல், புலன்களிற் படியும்போது, மனம் மட்டும் படிவதில்லை என்பதும், மனத்தின் மூலமாக எல்லா அகக் கருவி களுமே படிந்து இயங்குகின்றன என்பதும், மனத்தில் தோன்று வதைப் புத்தியும், புத்தியில் தோன்றுவதை அகங்காரத்திலும், அகங்காரத்தில் தோன்றுவதைச் சித்தமும், சித்தத்தில் தோன்றுவதைப் 'புருடன்' என்னும் கருவியாய் நிற்கும் உயிர் அறியும் என்பதும், 'புருடன்' என்பது அவ்வகக் கருவிகளுக்கு மேல் உள்ள வித்தைக் கருவிகளிற் கடைசியில் வருவது என் பதும், இங்ஙனம் அறிவுநிலை, வாயிற் காட்சியிலிருந்து கடல் அலை போல முறை முறையாக உயிரின்பால் வருவதற்கு இந்த அகக் கருவிகள் அனைத்தும் உதவுகின்றன என்பதும் தெரி கின்றன.

கடல் திரை இச் செய்யுளில் உவமையாக வந்தது; அதனுல் இச் செய்யுள் எடுத்துக்காட்டுச் செய்யுள் என்பதும் பொருந் தும்; உயிர் அறியும் முறைமையை விளக்கி, அத்தகைய அறி வுடைய உயிர், அறிவே யில்லாத அகக் கருவிகள் ஆவது எப்படி? ஒருகாலும் ஆகாது என்பதை ஆசிரியர் நிறுவினர்.

இரண்டாவது செய்யுள் :

"சிந்தித்தாய் சித்தம், தெளியாதாய் ஆங்காரம்,
புந்தியாய் ஆய்ந்து, மனமாகிப்—பந்தித்து,
வெவ்வேறு தானே துணிந்துள்ளம் இவ்வேறும்,
அவ்வேறும் 'போது'போல் ஆங்கு."

பொருள் :

உள்ளம் - புருடனுகிய உயிர்; சித்தமாய்ச் சிந்தித்து - சித்தம் என்னும் கருவியாகிச் செய்முறைகளைச் சிந்தித்து; ஆங்காரமாய்த் தெளியாது - ஆங்காரம் என்னும் கருவியாகித் தெளிதலில்லாமையாய் முனைந்து; புத்தியாய் ஆய்ந்து - புத்தி என்னும் கருவியாகி அம் முறைமைகளை ஆய்ந்து தெளிந்து; மனமாகிப் பந்தித்து - மனம் என்னும் கருவியாகிப் பொறி புலன்களைப் பற்றி; ஆங்கு - மானதக் காட்சியாகிய அக் கருவி

களில்; வெவ்வேறு தானே துணிந்து - வெவ்வேறு கருவிகளாய் ஒன்றித் தானே துணிவடைந்து; அவ் வேரும் போது போல் - கால நிலைகளுக்கு வேருதல் போலாகும். இவ் வேரும்-இங்ஙனம் அறியு முறையால் அந்தக்கரணங்களுக்கு வேருகும்.

'வேரும் போது போல் உள்ளம் வேரும்' என்க. சித்தமாய்ச் சிந்தித்து ஆங்காரமாய்த் தெளியாது என்று மாறுக. தெளிவது புத்தியின் செயலாதலால் ஆங்காரம் தெளியாது, என்ருர். ஆங்காரத்தின் செயல், முனைத்தெழுதல் மட்டுமே. இவ் என்பது இவற்றின் என்னும் பொருட்டு; 'இந்த அந்தக் கரணங்களின்' என்பது கருத்து. 'போது' என்னும் ஞாயிறு எல்லார்க்கும் தெரிந்தது. அதனுல் உண்டாகும் நாழிகை நாள் முதலிய காலங்களும் எல்லார்க்கும் தெரிந்திருக்கிறது. ஆகலால், 'அவ்' என்னும் சுட்டு, முன் அறிந்திருப்பன என்பதற்கு வந்தது. 'இவ்' 'அவ்' என்பவற்றில் 'அற்று' என்னும் சாரியையும், 'இன்' என்னும் நீக்கப் பொருளில் வரும் உருபும் உடன் தொக்கன.

நூற்பாவின் மேற்கோளில், 'மனே புத்தி அகங்கார சித்தம்' எனப் புலனறிவு உட்செல்லும் முறையில், கருவிகள் கூறப்பட்டன. இச் செய்யுளில், உயிர் அறிவு என்பது, 'சித்தம் ஆங்காரம் புத்தி மனம்' எனப் புறம் வரும் வகையில் மாறி ஓதப் பட்டது. உயிரறிவு, நான்கு அகக் கருவிகளின் மூலம் புறம் வருதல் என்க.

'புருடன்' என்னும் உயிர், முறையே சித்தமாய் ஆங்காரமாய்ப் புத்தியாய் மனமாகிப் புலன்களைப் பற்றித் தானே அறியும் உண்மை வந்தமையால், சித்தம் முதலிய கருவிகளுக்கு அறிவு இல்லை என்பது தானே பெறப்பட்டது. அதோடு, 'துணிந்து' என்று உயிரின் செயல் குறிப்பிடப்படுவதனுல், 'புத்தியின் செயல் ஆய்ந்து தெளிவதே' என்பதும், நான்கு அகக் கருவிகளின் செயல்களைக் கொண்டு உயிரறிவுக்குத்தான் செய்முறையை முடிவாக அறியுந் தன்மை உண்டென்பதும், புலப்படும்.

இங்ஙனம் அகக் கரணங்களாகும்போது உயிர் ஓங்காரத்தின் நாதத்தால் இயங்கி ஒன்ருகிறது. ஓங்காரத்தின் விந்து என்னும் பிரிவும் அ, உ, ம் என்னும் எழுத்துக்களும் சித்தம் முதலிய அகக் கருவிகளை இயக்குகின்றன. ஆனுல், ஓங்காரமும் அதன் பிரிவுகளும் அறியாப் பொருள்களாயிருக்கின்றன. ஆதலால், அவற்றை இயக்குவதற்கு அறிவுப் பொருள்களாகிய 'அதிதேவதைகள்' வேண்டும். உயிர், இவ்வாற்ருல், கருவிக

ளோடும் ஓங்காரப் பிரிவுகளோடும் அவற்றின் 'அதிதேவதைக' ளோடும் ஒருங்கு கலந்து புலனறிவைக் கொள்ளுகின்றது என்பதை அறியலாம். வருகின்ற செய்யுட்கள் இவற்றை எடுத்துக் காட்டும்.

*"அகார உகாரம் அகங்காரம் புத்தி;*
*மகாரம் மனஞ்சித்தம் விந்து;—பகாதிவற்றை*
*நாதம் உளவடிவாம்; நாடிற் பிரணவமாம்;*
*போதம், கடற்றிரையே போன்று."*

அகக் கருவிகள் நான்கின் செயல்களும் 'மானதக் காட்சி' என்பது முன்பே விளக்கப்பட்டது. உயிரின் அறிவு, அவற்றால் உருவங்களை அறியும். அப்போது அந்த உயிரில் ஓங்காரம் செயல் கொள்ளும்.

*"உய்ய என் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற"*

என்றார் மாணிக்கவாசகர்.

அகார உகாரம் அகங்காரம் புத்திட 'அ' எழுத்தும் 'உ' எழுத்தும் முறையே அகங்காரக் கருவியையும் புத்திக் கருவியை யும் இயக்கும்; மகாரம் மனம் சித்தம் விந்து - 'ம' எழுத்து. மனத்தையும், 'விந்து' என்னும் ஒளி சித்தத்தையும் இயக்கும்; நாதம் உளவடிவாம் - நாதம் என்னும் ஒலி உயிருருவாகும். பகாது இவற்றை நாடில் பிரணவமாம் - பகுக்காமல் இவ் வெழுத்துக்களை ஒன்றாய் நாடுவதானால் ஓங்காரமாகும். (ஆகவே ஓங்காரமே உயிரின் மூலம் அந்தக்கரணங்களை இயக்குதல் தெளிவாகும்.) போதம - இங்ஙனம் ஆகும் விழிப்பு நிலையறிவு; கடல் திரையே போன்று ஆம் - கடல் அலை தோன்றியும் ஒடுங்கி யும் வருவது போல இவ்வறிவும் தோன்றியும் மறைந்தும் வருவ தாகும்.

எழுத்துக்களுக்கு 'விந்து' என்பது ஒளி தரும்; அதனால் அவ்வெழுத்துக்களைப் பார்க்க முடிகிறது. நாதம் என்பது, அவ்வெழுத்துக்களுக்கு ஒலி தரும். தூய மாயைக்கு 'விந்து' என்றும் அதன் பிரிவுகளுக்கு 'வைந்தவம்' என்றும் பெயருண்டு. இங்கே கூறப்படும் 'நாதவிந்துக்கள்' தூய மாயையன்று; அதன் பிரிவுகள்.

விந்துவையும் நாதத்தையும் ஒளி ஒலிகளாகக் கொள்ளுத லால் அவை இரண்டும் வேறு கூறப்பட்டன; அ, உ, ம் என்னும் மூன்று எழுத்துக்களை மட்டும் கொண்டு ஓம் என்று சொல்லு தலும் வழக்கமாயிற்று.

உயிரின் இலக்கணம் இந் நூற்பாவிற் கூறப்படுதலாலும், ஓங்காரப் பிரிவுகள் இத்தனை என்று கூற வேண்டியிருத்த லாலும், அகக் கரணங்களோடு நாதம் செலுத்தும் 'புருட தத்துவ'மாகிய உயிரையும் சேர்த்துக் கூறினர்.

'பகாதிவற்றை நாடில் பிரணவமாம்' என்று மொத்த மாய்க் கூற வேண்டிய கட்டாயம், அந்தக் கரணங்களும் உயிரும் சேர்ந்து ஓங்காரப் பிரிவுகளால் இயக்கப்பட்டு ஒன்றாய் இணைந்து உயிரறிவு விளங்குதலால் என்க.

இச் செய்யுளில் கடல் அலை உவமை வந்தது. அதன் 'உவமேயப்' பொருளாக உயிரறிவின் நிகழ்ச்சி விளங்குகிறது. முதல் எடுத்துக்காட்டுச் செய்யுளிலும் கடல் அலை கூறப்பட்டது. அங்கே கூறியது, அறிவு அகக் கருவிகளின் மூலம் உயிரறிவுக்கு முறை முறையே வருவது பற்றியது; இங்கே கூறியது, புதிது புதிதாக அறிவு தோன்றுவதோடு, தோன்றியும் ஒடுங்கியும் வருதல் பற்றியது. அஃதாவது அவத்தைகளால் அறிவு விளங்கி யும் மறந்தும் வருவதாகும்.

புதிது புதிதாய்த் தோன்றுவது ஒடுங்குவது எல்லாவற்றிற் கும் காரணம் சிவஞானமாதலின், அதனை உயிரறிவு எய்தி உய்யும்பொருட்டே இங்ஙனம் வெவ்வேறு அவத்தைகள் உயிர்க்கு உண்டாகின்றன.

பிரிவுகளின் முறையில் அவற்றால் இயக்கப்படும் கருவிகள் கூறப்பட்டமையால், 'செய்யுளாதலின் முறை பிறழ வந்தன' என்பது இங்கே பொருந்தும்.

அ, உ, ம் விந்து நாதம் என்பன, முன்செய்யுட்களைப் போலவே பின்செய்யுளில் மாறிக் கூறப்பட்டன. இதுவும் 'செய்யுளாதலின் முறை பிறழ வைக்கப்பட்டது' என்பதற்குப் பொருந்தும்.

ஆன்மா அறிவுடையதாயிருத்தலின், அறியாப் பொரு ளாகிய அகக் கருவிகளுக்கு அது வேறு என்பது கருத்து.

> "எண்ணில ஓங்காரத் தீசர் சதாசிவமாம்
> நண்ணிய விந்துவொடு நாதத்து,—கண்ணில்
> பகர்ஆன்மா லோடு பரமன் அதி தெய்வம்
> மகரம் உக ரம்அகரத் தாம்."

பொருள் :

எண் - மானதக் காட்சியில்; நிலவு - விளங்குகின்ற; ஓங்காரத்து-ஓங்காரத்தின் பிரிவுகளில்; நண்ணிய விந்துவொடு

நாதத்து - அதிதெய்வம் உண்டான நாதத்துக்கும் விந்துவுக்கும் அதிதெய்வம் இயக்கும் அறிவுடைய ஆதிக்கத் தெய்வங்களே; கண்ணில் - கருதுமிடத்து; ஈசர் சதாசிவமாம் - சதாசிவ தேவரும் மாகேச தேவருமாம்; மகரம் உகரம் அகரத்தும் - மகரத்தோடும் உகரத்தோடும் அகரத்தோடும்; அதிதெய்வம் பகிர் அயன் மாலொடு பரமன் ஆம் - அதிகார தேவதைகள் முறையே சொல்லப்படுகின்ற உருத்திரனும் மால் அயனும் ஆகும்.

முறையே சொல்லும் பொருட்டுச் சதாசிவர் மாகேசர் உருத்திரர் அயன்மால் என்று உரைக்கப்பட்டன. அதனால் மகரம், உகரம், அகரம் எனப் பிரித்துக் கொள்ளப்பட்டன; மகர வொற்று ஓசைக்காக வலித்தது. உருத்திரன் தெய்வப் பிரிவைச் சேர்ந்த உயிராகிய அதிதெய்வமாதலால், 'பரமன்' எனப் பட்டார். அயனும் மாலும், மாயையுங் கூடிய மும்மலமும் சேர்ந்த உயிர் வகைகள்; ஆதலால் அவ்விருவரும் ஒடு கொடுத்து வேறு பிரிக்கப்பட்டனர். 'பரமன் ஆம்' என்க. இங்கே கூறிய உருத்திரன் அயன் மால் என்பவர்கள், தூய மாயையில் 'சுத்த வித்தை'யில் உள்ளவர்கள். 'விந்துவொடு நாதத்து' என்னும் அவ்விரண்டும் ஓங்காரத்தில் எழுத்து களாகத் தெரியாமையால், வேருகப் பிரிந்து வந்தன. 'அதி தெய்வம்' என்பதை இங்குச் சேர்த்துக்கொள்க. விந்துவோடு என்னுமிடத்து 'ஒடு' உடனிகழ்ச்சி; நாதத்து, 'கு' என்னும் நான்கனுருபு தொக்கது. மானதக் காட்சியை அடைதலால், 'எண் நிலவு', என்ருர் ஆசிரியர்.

ஓங்காரத்தின் பிரிவுகளுக்கு 'அதிதேவதைகள்' இச் செய்யுளிற் கூறப்பட்டன; இது, விளக்கச் செய்யுள்.

நூற்பாவின் இரண்டாம் பிரிவு :

இரண்டாம் பிரிவு, 'அவை சந்தித்தது ஆன்மா, சகசமலத் துணராது' என்பது; மூன்ருவது பிரிவில் வரும் 'அமைச்சு அரசு ஏய்ப்ப' என்பதை இதனுடன் சேர்த்துக்கொண்டு, 'ஆன்மா அமைச்சு அரசு ஏய்ப்ப அவை சந்தித்தது' என்று பொருள் செய்து கொள்ளலாம்.

இதற்கு ஆசிரியர் கூறும் மேற்கோள், "இனி இவ்வான்மா, சகசமலத்தினுல் உணர்வின்று என்றது."

'அந்தக் கரணங்களில் ஒன்றன்று ஆன்மா' என்னும் உண்மை முதற் பிரிவில் வந்தது. இந்தப் பிரிவில், 'ஆணவ

மலம் என்னும் இருளின் சேர்க்கையால் ஆன்ம அறிவு மறைக்கப் பட்டு, அறிவே இல்லை எனும்படி ஆகிவிட்டது' என்று வந்தது. சகசமலம் என்பது ஆணவமலம்; இயல்பு மலம் என்றும் சொல்லலாம். மாயை மலமும் கன்ம மலமும் இடை யில் வந்த மலங்கள்; 'சகச மலத்தினால் ஆன்மாவுக்கு உணர் வின்று என்றமையால் இடையில் வந்த மாயை கன்ம மலங்க ளால் ஆன்மாவுக்கு உணர்வு உண்டு' என்று தெரிகின்றது.

'இடையில் வந்த' என்பதற்கு 'இடையில் வந்து சேர்ந்த' என்பது பொருள். அதனால், முன்னமேயே அவை உள்ளன (சற்காரிய வாதம்) என்பது தெளியப்படும். அவ் விரண்டும் பரந்துள்ளனவாயினும் (வியாபகமே யாயினும்), திருவருளால் இடையே செயல்பட்டுத் தம் இயல்பு ஆன்மாவிடம் புலப்பட நேர்ந்தது என்று உணரப்படும். மாயைக் கருவிகளாலும் வினைகளின் உரசுதலாலும் இவ்வாறு ஆன்மாவுக்கு உண்டாகும் அறிவு, ஒரு வகையில் செயற்கையாக நேரும் அறிவு என்றே தெளியப்படும். இது சிறப்பறிவன்று; அஃதாவது அருட் சேர்க் கையால் நேரும் மெய்யுணர்வன்று.

மாயை முதலியன சேராதபோது ஆணவ மலம் தனது இயல்பாகிய அறியாமையிருளை உயிர்களுக்குச் செய்து வரும்; இதை, ஆணவத்தின் 'தன்னியல்பு' எனலாம்; மாயைக் கருவிகள் சேர்ந்தபோது உண்டான உயிரின் அறிவு மெய் யுணர்வு அல்லாமையால், அதனை ஆணவ மலத்தின் 'பொது இயல்பு' என்று கொள்ளலாம். இங்ஙனம் மலத்தின் இரண் டியல்புகள் பெறப்பட்டன; அதன், 'சிறப்பியல்பு', 'யான்' 'எனது' என்று உயிர்களை நினைக்க வைப்பது. இதனால், ஆணவ மலத்தின் இலக்கணமும் சிறிது இங்கே அறிய நேர்ந் தது.

சிவஞான போதத்தின் முதல் நூற்பாவில், 'மலத்து உளதாம்' என்று வந்தமை, நினைவில் இருக்கக்கூடும்; ஆணவ மலத்தின் மறைப்புத் தேயும் பொருட்டு உலகுயிர்கள் மீளத் தோன்றும் என்பது அதன் பொருள்.

ஆதலால், ஆசிரியர், 'அதுதான் ஞான திரோதகமாய் மறைத்துக்கொடு நிற்றலால்' என்று இங்கே ஏதுக கூறினார்.

இதில், 'ஞானதிரோதகம்' என்பதன் பொருள், மறைத்துக் கொடு நிற்றலான் என்பதுதான். 'ஞான திரோதகம்' என்றும் சேர்த்ததனால், மறைத்தது உயிரையன்று. அதன் இயல்

பாகிய ஞானத்தை என்று தெரிகிறது. ஞானத்தை மறைத்துக் கொண்டு ஆணவ இருள் நிற்கின்றது என்பது கருத்து. இதனால் உயிர்களுக்கு ஞானம் என்பது இயற்கையே உள்ளதென்பது புலப்படும். உயிர்களுக்கு 'அஞ்ஞானம்' என்பது ஞானம் இல்லாமையே என்பவர் கொள்கை. 'உள்ளது சிறத்தல்' என்னும் இயற்கைக் கொள்கையால் (சற்காரிய வாதத்தால்) மறுக்கப்பட்டு விடும்.

'ஐக்கியவாத சைவர்' மதம், ஆணவ மலத்தின் இருப்பை ஒத்துக்கொள்ளாதது; மாயை கன்மங்களே உயிரறிவின் மறைப்புக்குக் காரணம் என்று அவர்கள் கருதுவார்கள்; ஆனால், ஆணவமலம் உயிரறிவை மறைப்பது என்பதையும், மாயைக் கருவிகள் (உடம்பாய்த் தலைப்பட்டு) உயிரறிவை வளர்ப்பது என்பதையும் அவற்றின் வேறுபாடாக அவர்கள் அறிவதில்லை.

ஓர் எடுத்துக்காட்டுச் செய்யுள் இங்கே வருகின்றது. இது அவ் வேறுபாட்டை இனிது விளக்குகிறது.

*"மாயா தனுவிளக்கா மற்றுள்ளங் காணாதேல்,*
*ஆயாதாம் ஒன்றை அது அதுவாய்;—வீயாத*
*வன்னிதனைத் தன்னுள் மறைத்தொன்றாங் காட்டம்போல்*
*தன்னைமலம் அன்றணைதல் தான்."*

**பொருள் :**

மாயா தனு - மாயைக் கருவிகளாலான உடம்பு; விளக்கு ஆ - ஒளி விளக்கு ஆக; உள்ளம் காணாதேல் - உயிர் காணாதாயின்; அது அதுவாய் - இன்னது இன்னது என்று; ஆயாதாம் ஒன்றை - ஒரு பொருளையும் அறிய மாட்டாது;

தன்னை - உயிரை; மலம் - ஆணவ மலம்; அன்று - தொன்மையாகவே; அணைதல்தான - சேர்தல் என்பதுதான்; வீயாத வன்னிதனை - அழியாத நெருப்பை; தன்னுள் மறைத்து - தன்னிடத்தே மறைத்துக் கொண்டு; ஒன்றாங் காட்டம்போல் - வேற்றுமையற்று ஒன்றாய் நிற்கும் விறகைப் போல்வதாகும்.

இச் செய்யுளின் கருத்து, மாயை மலம் விளக்குப்போல் ஒளிகாட்டி உயிரறிவை எழுப்புவதென்றும், தீயும் விறகும் ஒன்றாய் நிற்பதுபோல் உயிரறிவோடு ஆணவமலம் சேர்ந்து, அதனை மறைத்துக் கொண்டு நிற்பது என்றும் புலப்படுகின்றது.

"உயிரறிவை விளக்குதல் மாயையின் செய்தி; அவ்வறிவைத் தடைசெய்துகொண்டு நிற்றல் மலத்தின் செய்தி; இவ் விரண்டும் இங்ஙனம் ஒளியும் இருளும் ஒளியும்போல் இகலி நிற்பன" என்பது உரையாசிரியரின் உரை.

'விளக்காம்' என்று சொற் பிரித்தல் ஆகாது. 'விளக்காக் காணுதேல்' என உரையிலும் வருதலால், விளக்காக என்பதே ஈறுகெட்டு நின்றதாக எண்ண வேண்டும். 'மாயைக் கருவிகள் விளக்குப் போல் ஒளி காட்டிக்கொண்டு உயிர்க்கு உதவியாய் இருந்தும், அதற்கு மாருக உயிர் அவ் வுதவியைக் காணு விட்டால், என முதல் அடி வருதலின், மற்று என்பது உள்ளம் என்பதோடு இயைந்தே. வினை மாற்றின்கண் வந்தது எனலாம். 'ஒன்றை' என்னுமிடத்தில், ஒன்றையும் என உம்மை விரித்துக் கொள்க. ஒன்றையும் அது அதுவாய் ஆயாதாம் என்பதே பொருந்தும்.

'வன்னி' என்பது உயிரின் அறிவு. 'காட்டம்' என்னும் விறகு அதனை மறைத்துக் கொண்டிருக்கும் ஆணவமலம். இரண்டும் சேர்ந்து ஒன்று போலவே உள்ளன. அப்படித்தான் உயிரறிவை மலம் அணைதல் என்பது. 'அணைதல்தான், காட்டம் போலும்' என்று முடித்துக் கொள்க.

உயிரறிவும் ஆணவ மலமறைப்பும் இங்ஙனம் இரண் டன்மை யாயின. 'அன்று' என்னும் குறிப்பால் ஆணவம் அணைந்தது தொன்மையே என்று பெறப்பட்டமையால், மாயா தனு அமைந்தது இடையிலே என்பது தெரிந்தது. ஆணவ இருள் உயிர்கள்தோறும் இங்ஙனம் உயிரறிவை மறைத்துக் கொண்டு பரவலாக நிற்கிறது.

அரசருக்கு அமைச்சர் கருத்து உதவுதல்போல, உயிர்க்கு மாயைக் கருவிகள் ஓரளவு அறிவு உதவுவன என்பதற்காகவும், அவத்தைகளுக்கு மனம் முதலியன முதன்மையாக உதவுவத லால் அந்த அகக் கருவிகள் அமைச்சராய் உதவுவன என்பதற் காகவும், அவை (அகக் கருவிகளை) சந்தித்தது ஆன்மா' என் ருர். ஆதலால் 'அமைச்சு அரசு ஏய்ப்ப' என்பதை இரண்டாம் பிரிவோடும் சேர்த்துக் கொள்ளுதல் பொருந்தும்.

நூற்பாவின் மூன்றும் பிரிவு, கடைசி பிரிவாகும். அது, 'அமைச்சு அரசு ஏய்ப்ப நின்று ஐந்தவத்தைத்து' என்பது.

இதற்கு மேற்கோளாக ஆசிரியர் கூறுவது, 'இனி இவ் வான்மா சாக்கரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதமாய் உள்ள பஞ்சாவத்திதனுய் நிற்கும் என்றது.'

அவத்தைகள் பலவாதலின் ஐந்தவத்தைப் படுதல் இன்னவை என்று திட்டமாய் இம் மேற்கோளில் தெரிவிக்கப் பட்டது.

(தொடரும்)

# தமிழின் தலைமையை நாட்டும் தனிச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

3. உருளை

உல்—உலம்=1. உருட்சி. 2. திரட்சி. ''உலங்கொள் சங்கத்தார்கலி'' (தேவா. 112:8). 3. திரண்டகல். ''உலஞ் செய்த வைரக்குன்ற மோரிரண் டனைய தோளான்'' (சீவக. 2915).

உலம் வருதல்=1. சுழலுதல். 2. நெஞ்சு உழலுதல். ''உயிர்க்கு முசாஅ முலம்வரும்'' (கலித். 145:4)

உலம் வருதல்—உலமருதல் = மனஞ் சுழலுதல், கலங்கி வருந்துதல், துன்புறுதல். ''புலம்பியா முலமர'' (கலித். 83:2).

உலம்வரல்—உலமரல்=துன்பம் (சூடா.)

உலமரல் — அலமரல் = சுழற்சி. ''அலமரல் தெருமரல் ஆயிரண்டுஞ் சுழற்சி'' (தொல். உரி. 13).

உலம்—அலம்=1. சுழற்சி. 2. துன்பம். ''அலமகன் முத்தியுண்டாம். (சூத. எக்கிய. பூ. 2 : 8).

உல்—உல—உலப்பு—அலப்பு=மனக்கலக்கம். ''அலப்பா யாகாசத்தை நோக்கி'' (திவ். திருவாய். 5:8:4)

உல—உலக்கை=1. உருண்டு நீண்ட உரற்குற்றுக் கருவி. ''மிளகெறி யுலக்கையின்'' (பதிற்றுப். 41). 2. உலக்கை போன்ற போர்ப் படைக்கலம். ''உலக்கை சூலம் வேல்'' (கந்தபு. சதமுகன். 15). 4. உலக்கை வடிவான ஓண நாண்மீன். (பிங்.) 5. வெருகன் கிழங்கு. (தைலவ. தைல. 84).

ம. உலக்க, க. ஒலக்கெ.

உலத்தல் = சுற்றுதல். உல — உலவு. உலவுதல் = அலைதல், திரிதல். ''ஒருங்கு திரை யுலவுசடை'' (திருவாச. 38:1) 2. வீசுதல், பரத்தல்.

உலவு—உலவை=1. காற்று. (திவா.). 2. ஊதை நோய் (வாதரோகம்). ''வழுத்துலவைக் குலமுழுதும்'' (தைலவ. தைல. 88).

உலவையான் = காற்றுத்தேவன். (கந்தபு. அரசு. 7).

உல—உலா=1. அரசன் தலைநகரைச் சுற்றி வரும் பவனி. "போந்தானுலா" (சங்கர. உலா.) 2. அரசனுலாவைப் பற்றிய பனுவல் (பிரபந்தம்). "கலிவெண்பா வுலாவாம்" (வெண்பாப். செய். 27). 3. மக்கள் காற்றுடச் சுற்றிவரல்.

உலா—உலாவு. உலாவுதல்=1. சூழ்தல். "தூசுலாய்க் கிடந்த" (சீவக. 550). 2. சுற்றித் திரிதல். 3. பவனி வருதல். (W.) 4. இயங்குதல், வீசுதல். "வந்துலாய்த் துயர் செய்யும் வாடை" (பு. வெ. 8 : 16, கொளு). 5. பரவுதல். (வெள்ளம்) "உயிரென வுலாய தன்றே" (கம்பரா. ஆற்றுப். 20).

உலா—உலாங்கு=காவட்டம் புல்.

உலாங்கு—உலாஞ்சு. உலாஞ்சுதல்=1. தலை சுற்றுதல், கிறுகிறுத்தல். 2. அசைந்தாடுதல். கப்பல் உலாஞ்சுகிறது.

உலா—உலாத்து. உலாத்துதல்=(செ. கு. வி.) உலாவுதல், ஊர்வலத்திற் செல்லுதல். (காளத். உலா. 223)

(செ. குன்றுவி.) 1. உலாவச் செய்தல். குதிரையை உலாத்திவா. (உ. வ.) 2. பரவச் செய்தல். 3. அசைத்தாட்டுதல். கொண்டையுலாத்தி = கொண்டையை ஆட்டும் பறவை. வேட்டியை உலாத்திக் கொண்டு போகிறான். (உ.வ.)

ம. உலாத்து. உலாத்து=உலாவுகை.

உலாத்துக்கட்டை=கதவு நின்றாடுஞ் சுழியாணி.

உலாத்துக் கதவு=பிணையற் கதவு, மடக்குக் கதவு.

உலவு—உலகு=1. சுற்றி வருங் கோள். 2. உலகப் பொது. 3. ஞாலம். 4. ஞாலமும் அதிலுள்ள இரு திணைப் பொருள்களும். 5. உலக மக்கள், மன்பதை. 6. நன்மக்கள். 7. ஞாலப் பகுதி.

உலகு—உலகம்=1. ஞாலம். (பிங்.) 2. உலகத்தொகுதி. "உலகமுண்டபெருவாயா" (திவ். திருவாய். 6 : 10 : 1). 2. நிலப்பகுதி. "மாயோன் மேய காடுறை யுலகமும்" (தொல். அகத். 5) 3. உயிரினங்கள். "உலக முவப்ப வலனேர்பு திரிதரு" (திருமுரு. 1). 4. மக்கட் டொகுதி. 'கால முலக முயிரே யுடம்பே" (தொல். சொல். 57). 5. பொதுமக்கள். உலக வறவி. 6. ஊர் மக்கள். உலக விடைகழி. 7. நன் மக்கள். "உலகத்தோ டொட்ட வொழுகல்" (குறள். 140). 8. வழக்கம். "ஒழுக்க நடையே யுலகம தாகும்" (மாறன. 320).

உலகம் என்னுஞ் சொல்லிலுள்ள அம்மீறு பெருமைப் பொருட் பின்னொட்டு (Aug. suf.) ஒ. நோ: கம்பு (stick)—கம்பம் (pillar), நிலை (stand)—நிலையம் (station), மதி (moon)—மதியம் (full moon), விளக்கு (lamp)—விளக்கம் (light house).

அரங்கு—அரங்கம், கடுகு — கடுகம், குண்டு—குண்டம், குன்று—குன்றம், சங்கு—சங்கம், துண்டு—துண்டம், நகர்—நகரம், முத்து—முத்தம் முதலிய பல சொற்களில் அம்மீறு தன் பெருமைப் பொருளை யிழந்துள்ளது. இங்ஙனமே உலகம் என்பதும்.

குடும்பு—குடும்பம் என்பதிலோ, அம்மீறு தன் சிறப்புப் பொருளை யிழந்ததுமன்றி, அதற்கு நேர்மாறான சிறுமைப் பொருளையுந் தருகின்றது. குடும்பம் என்பது, சிறிதும் பெரிதுமான ஒரு தனிக் குடும்பத்தையே குறிக்கும்போது, குடும்பு என்பது பல குடும்பஞ் சேர்ந்த சேரியை அல்லது ஊர்ப் பகுதியைக் குறிக்கின்றது (உத்தரமேரூர்க் கல்வெட்டைப் பார்க்க.) பாண்டியராட்சியும் பண்டைப் பைந்தமிழ்க் கழகமும் இன்மையே, இத்தகைய வழுவழக்கிற்குக் கரணியம்.

மொழி வரலாற்றையும் சொல்லமைப்பையும் அறியாத அல்லது பிறழவுணர்ந்த தமிழ்ப்புலவர் சிலர், உலகம் என்னுஞ் சொல்லின் கடைக்குறையே உலகு என்னும் வடிவென்று கொள்வர்.

"பகவன் முதற்றே யுலகு" (குறள். 1)
"நீரின் றமையா துலகெனின்" (ஷை 20)
"வகைதெரிவான் கட்டே யுலகு" (ஷை 27)
"பெருமை பிறங்கிற் றுலகு" (ஷை 23)
"உலகவாம் பேரறிவாளன் திரு' (ஷை 215)
"என்னாற்றுங் கொல்லோ வுலகு" (ஷை 211)

எனச் செய்யுள் வழக்கிலும்; உலகளவு, உலகியல், உலகாளி, உலகழிவு என உலக வழக்கிலும்; உலகு என்னுஞ்சொல் உலகம் என்னும் வடிவு போன்றே பெருவழக்காய் வழங்கு தலையும், சொல்லமைதி யொன்றுங் குறையாதிருத்தலையும், நோக்குக. உலகு என்பதன் விரித்தலே 'உலகம்'

உலகம் என்னும் சொல்வடிவு, வடமொழியில் 'லோக' என்றும், சூரசேனிப் பிராகிருத வழிவந்த இந்தியில் 'லோக்' என்றும், திரியும். உலக சவை—லோக்ஸபா.

தமிழுக்கு அடுத்து வடபால் வழங்குவதால் வடகு (வடுகு) என்று பெயர்பெற்ற தெலுங்கில், உலகம் என்னும் தமிழ்ச் சொல் லோகமு என்று திரிந்துள்ளது. இது தெலுங்கியல் பென்பது, உரல்—தெ. ரோலு என்னும் திரிபால் அறியப்படும்.

பிற்காலச் சேண் வடமொழியாகிய சமற்கிருதத்தில், லோகமு என்னுந் தெலுங்க வடிவு ஈறு கெட்டு 'லோக' என் றாயிற்று. இங்ஙனம் ஈறு கெடுவது சமற்கிருத வியல்பே.

ஒ. நோ: அம்பலம்—அம்பர, அரங்கம்—ரங்க, கடுகம்—கடுக (ṭ), காலம்—கால, குடும்பம்-குடும்ப (ṭ), சகடம்—சகட (ṭ), சங்கம் (சங்கு)—சங்க (ṅkh), தண்டம்—தண்ட (d—), தானம்—தான (d—), திடம்—த்ருட (dṛḍha), நகரம்—நகர (g), நாக ரிகம்—நாகரிக (—g—), நாகம்—நாக (g), நாடகம்—நாடக (ṭ), நீலம்—நீல, நீரம்—நீர, பக்கம்—பக்ஷ, பாகம்—பாக (bhāga), பூதம் (பெரும்பேய்)—பூத (bh.), மங்கலம்—மங்கல. மண்டபம்—மண்டப (p), மண்டலம்—மண்டல, மீனம்—மீன, முகம்—முக (kh), மாதம்—மாஸ, வாலம்—வால.

இவையும் இவைபோன்ற பிறவும் வடமொழி யென்னும் சமற்கிருதத்திற்கு இன்றியமையாதனவா யிருப்பதால், வட மொழியாளர் தமிழரின் பேதைமையைப் பெரிதும் பயன்படுத்தி, சமற்கிருதம் தேவமொழியாதலால், அதிலுள்ள சொற்களெல் லாம் அதற்குரியனவே யென்றும், தமிழே சமற்கிருதத்தினின்று தனக்கின்றியமையாத அடிப்படைச் சொற்களையெல்லாம் கடன் கொண்டுள்ள தென்றும், தொன்றுதொட்டுத் துணிச்சலுடன் ஏமாற்றி வந்திருக்கின்றனர்.

சமற்கிருதம் தேவமொழியென்பது, பிராமணன் நிலத் தேவன் (பூசுரன்) என்பதையே முற்றுந் தழுவிய தென்றும், சமற்கிருதச் சொற்களில் ஐந்திலிருபகுதி தூய தமிழென்றும், அறிதல் வேண்டும்.

கடன்கொண்ட தமிழ்ச் சொற்களை யெல்லாம் சமற்கிருதச் சொல்லென்று காட்டற்கு, பொருந்தப் பொய்த்தலாகவும் பொருந்தாப் பொய்த்தலாகவும் குறிக்கோட் சொற்பிறப் பியலையே (Tendentious Etymology) வடமொழியாளர் கை யாண்டு வந்திருக்கின்றனர்.

லோக என்னும் சொல்லிற்கு அவர் கூறும் பொருட் கரணியம், 'பார்க்கப்படுவது' என்பதே. லோக் என்னும் ஆரியச் சொல்லிற்குப் 'பார்' (look) என்பது பொருள். ஆத லால், அதை மூலமாகக் கொண்டு அங்ஙனங் கூறினர்.

அச் சொல் look என்னும் ஆங்கிலச் சொல்லொடு தொடர்புடையது. *OE*. locian, *OS*. locon, *OHG*. luogen, *WG*. lōk.

லோக் என்னும் ஆரியச்சொல் நோக்கு என்னும் தென் சொல்லின் திரிபே. நகர (னகர) லகரங்கள் ஒன்றோடொன்று மயங்கும். நோக்கு என்பது இந்தியில் தேக் என்று திரிந்துள்ளது.

உலகு (உலகம்) என்னுஞ் சொல்லிற்கு, உருண்டையானது அல்லது சுற்றிவருவது என்னும் பொருள் பொருந்துமா, அல்லது பார்க்கப்படுவது என்னும் பொருள் பொருந்துமா, என்று அறிஞர் கண்டுகொள்க.

உலகம் என்னும் சொல் பொதுமக்களைக் குறிப்பது பெருவழக்கு. எ—டு: உலகம் என்ன சொல்லும்?

ஒ. நோ. *L*. *Vulgus* (volgus), the people, common peop le, the great multitude, the public.

*L*. vulgaris—*E*. *vulgar*, characteristic of the common people.

உலவு—அலவு—அலவன் = வளைந்த குறடு போன்ற முன் கால்களையுடைய நண்டு.

அலவு—அலகு = 1. குறடு. 2. குறடுபோன்ற தாடை. அலகைப் பேர்த்துவிட்டான். 3. தாடை போன்ற அரணைக் கொடிறு. "அரணை அலகு திறக்கிற தில்லை." (பழ.)

அலகு—அலக்கு = துறடு, துறட்டி.

உல்—உள்—உழல், உழலுதல் = 1. சுழலுதல். (பிங்.) 2. அலைதல், திரிதல, "ஆட்பார்த் துழலு மருளில் கூற் றுண்மையால்" (நாலடி. 20). 3. இயங்குதல், வீசுதல். "சிறு காற் றுழலும்" (கல்லா, கண.) 4. நிலைகெடுதல். அந்தக் குடி உழன்றுபோயிற்று.

உழல்—உழலை = 1. சுற்றிவரும் செக்குலக்கை. 2. சுழலும் குறுக்குமரம். "உழலைமரத்தைப் போற் றொட்டன." (கலித். 106). 3. கணைய மரம். "வேழம்......உழலையும் பாய்ந்திறுத்து" (பு. வெ. 12, வென்றிப். 8). 4. மாட்டின் கழுத்திற் கட்டும் உழலைக் கழுந்து.

உழற்சி = 1. சுழற்சி. 2. அலைகை.

உழற்றல் = (செ. குன்றா வி.) 1. சுழற்றுதல். 2. அலையச் செய்தல்.

"என்னை யவமே யுழற்றி" (திருக்கோ. 100, உரை, அவ.) —(செ. கு. வி.) கைகால் நோவாற் புரளுதல்.

உழன்றி=மாட்டின் கழுத்திற் கட்டும் உழலைக் கழுந்து.

உழிதல்=அலைதல். "உழிதலை யொழிந்துள ருமையுந் தாமுமே" (தேவா. 553 : 10).

உழிதருதல்=அலைதல். "உன்மத்த மேற்கொண் டுழி தருமே" (திருவாச. 5 : 7).

உல்—உர்—உருள். உருள்தல்=1. தொடர்ந்து புரளுதல். "திண்வரை யுருள்கிலேன்" (திருவாச. 5 : 39). 2. உருண்டு திரளுதல். சிலந்திக் கட்டி உருண்டு வருகிறது. 3. புரண்டழிதல். "உலகெலா முருளுமின்றெண" (சீவக. 2452). 4. செல்லுதல். "நூல்வழி யுருள்விலா மனத்தவர்க்கு" (சூளா. முத்தி. 13). 5. (சக்கரம்) உருண்டுசெல்லுதல். "உருள்பெருந்தேர்க் கச்சாணி யன்ன ருடைத்து" (குறள். 667).

ம. 1, க. உருள், தெ. உரலு.

உருள்=1. சக்கரம். 2. வண்டி, தேர். 3. சகட நாண் மீன்.

உருளரிசி=உருண்டையான கொத்துமல்லி. (திவா.)

உருள்—உருளி=1. வட்டம். "உருளி மாமதி" (சீவக, 532). 2. சக்கரம். 3. திரிகையின் மேற்கல். 4. க. உருளி. உருளை "வல்வா யுருளி கதுமென மண்ட" (பதிற்றுப். 27 : 11).

உருள்—உருளை=1. சக்கரம். "சகடிரு சக்கர வுருளைக ளுய்க்கவே" (பாரத. வேத்திர. 50). 2. உருண்டை. 3. உருளைக் கிழங்கு.

உருள்—உருண்டை=1. கோளவடிவம். 2. கோளம், குண்டு உருண்டையான பொருள். 3. கவளம். 4. திரட்சி.

உருண்டை — உண்டை = 1. உருண்டையானது, 2. உருண்டையான பொருள்கள் : பொரியுண்டை, சோற்றுண்டை, வெல்லவுண்டை, மண்ணுண்டை, வில்லுண்டை, கஞ்சாவுண்டை முதலியன. 3. கோள், உலகம், "அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்" (திருவாச. திருவண்ட. 1) 4. கவளம். 5. கும்பு, கூட்டம். "கோவுண்டை கோட்டாற் றழிவித்த கோன்" (பரிபா. 6:36, உரை).

உண்டை—உட்டை=உருண்டையான விளையாட்டுக்காய். "உட்டை யென வைத்து விளையாடு பைங்கழற்காய்", (திருப்போ. சந். பிள்ளைத். அம்புலி. 6)

உருளை—உருடை=1. சக்கரம். 2. வண்டி. "உருடை யூடு திரியும்" (சேதுபு. முத்தீர். 42)

உருடை—ரோடை—ரோதை—*L rota*, a wheel.

*L. roto*, to cause to turn round like a wheel. to whirl round, swing round.

*L. rotula*, a little wheel.

*L. rotunde*, roundly.

*L. rotunditos*, roundness. *rotundity* (Plin.)

*L. rotundo*, to round, make round.

*L. rotundus*, round, circular, spherical.

இவற்றினின்று, பின்வருமாறு ஆங்கிலச் சொற்கள் தோன்றியுத் திரிந்துமுள்ளன.

*E. rota*, list of persons acting, or duties to be done, in rotation.

*E. rotary*, acting by rotation.

*E rotate*, v. move round axis or centre, revolve.

adj. wheel - shaped.

*E. rotation*, rotating, recurrence, recurrent series or period, regular succession in office, in, by, rotation.

*E. rotator*, muscle that rotates a limb etc.

*E. rotifer*, wheel - animalcule, member of class *Rotifera* with rotatory organs used in swimming.

*E. rotograph*, print of MS. page etc. got by sensitized roll.

*E. rotor*, rotary part of machine.

*E. rotund*, a. circular, round, *rotundate*.

*E. rotunda*, building of circular ground - plan, esp. one with dome.

Roll என்னும் ஆங்கிலச் சொல் 'உருள்' என்பதை ஒத்திருக்கின்றது. ஆயின், அதை rotula அல்லது rotilla

என்னும் இலத்தீன் குறுமைப் பொருட் சொல்லினின்று (dim. n.) திரிக்கின்றனர் மேலையறிஞர். இது வட்டவழித் திரிப்பு. *L.* rotulus.

தமிழில் 'இல்' என்பது ஒரு குறுமைப் பொருட் பின்னொட்டென்பது இங்குக் கவனிக்கத்தக்கது.

எ—டு: குடி (வீடு)—குடில் (குடிசை), தொட்டி—தொட்டில் (சிறு தொட்டி), விட்டி—விட்டில். 'தொட்டில்' (சிறு ஆடு கட்டில்) இன்று ஏணையென்று தவருக வழங்குகின்றது.

*E. roll*, n. cylinder formed by turning flexible fabric such as paper or cloth over and over upon itself without folding. v. move or send or go in some direction by turning over and over on axis often with aid of gravitation. *ME.* & *OF.* rolle, role.

*E. roller*, cylinder of wood, stone, metal, etc.

*E. role*, actor's part, one's function. *F.* role=roll.

*E. roly* - poly, pudding made of sheet of paste covered with jam etc., formed into roll, and boiled.

Round என்னும் ஆங்கிலச் சொல்லும் 'உருண்டை' என்பதை ஒத்திருக்கின்றது. ஆயின், அதை rotundus என்னும் இலத்தீன் சொல்லினின்று திரிப்பர் மேலையறிஞர். இதுவும் வட்டவழித் திரிப்பு.

*E. round*, n. round object.

v. invest witb, assume, round shape.

a. spherical or circular or cylindrical or approaching these forms.

adv. with more or less circular motion *ME.* &. *OF.* rund, round.

*E. roundel*, small disc.

*E. roundelay*, short simple song with refrain.

*E. rounder*, one complete run of player through all the bases arranged in a round.

*E. roundly*, adv. in thorough-going manner.

*E. rondeau*, *F. rondel*, a poem with opening words used twice as refrain.

*E. rondel*, special form of *rondeau. ME. &. OF.* rond, round.

*E. rondo, It. & F. rondeau.*

*E. rondure*, round outline or object. *F. rondeur*, round.

தமிழில், உகர முதல் மூல வேர்ச் சொல், க ச த ந ப ம என்னும் ஆறு சொன்முதல் மெய்யெழுத்துக்களொடுங் கூடி, ஆறு வழி வேர்களை அல்லது வழியடிகளைப் பிறப்பிக் கின்றது. இங்ஙனமே 'உருள்' என்ற சொல்லும்.

உருள் ஒ. நோ: *E. whirl*, swing round and round, revolve. *ON. hvirfla*, rotate. *E. whorl*, ring of leaves, one turn of a spiral, disc on spindle. *ME.* wharwyl whorail.

குருள்—குருளுதல்=சுருளுதல், சுருளாதல். "குருண்ட வார்குழல்" (திருவிசை. திருவாலி. 1 : 3). ஒ. நோ: *MDu* krul, *G* krollen, *LG. Du., EFris. krullen to* curl *E.* curl.

சுருள்—ஒ. நோ: *E. Swirl*, eddy. *Se., Norw.* svirla, *Du. Zwirrelen*, to whirl, *G. schwirrlen*, to totter.

துருள்—(துரள்)—(துரடு)—துறடு—துறட்டி—தோட்டி= வளைந்த அலகு. ஒ. நோ: *E. twirl*, to revolve, spin, whirl.

நுருள்—நெருள்—நெருடு. நெருடுதல்=நூலை உருட்டித் திரித்தல். "இழை நக்கி நூனெருடு மேழை யறிவேனோ" (தமிழ்நா.)

புருள்—புருளை—புருடை—பிருடை = யாழின் அல்லது நரப்புக் கருவியின் முறுக்காணி.

தெ. பிரட, க. பிரடெ.

முருள்—முருடு=உருண்ட முண்டு அல்லது முடிச்சுக் கட்டை.

உருள்—உருட்டு. உருட்டுதல்=1. உருண்டையாகச் செய்தல். "முருடீர்ந்துருட்டற்கு" (கம்பரா. மாரீசன். 139) 1. உருளச் செய்தல். "அறக்கதிராழி திறப்பட வுருட்டி" (மணி. 5 : 76). 3. மருட்டுதல். "கடபட வென்றுருட்டு தற்கோ" (தாயு. நின்ற. 3).

க. ம. உருட்டு.

உருட்டு=1. சரிவு. 2. வளைவு. 3. சக்கரம். "உருட் டோட வோடிய தேர்" (குலோத். கோ. 212). 4. மோதிரவகை. 5. உருண்டையான பொருள். 6. திரட்சி. 7. உருட்டுகை. 8. ஏமாற்றுகை. 9. வெருட்டு.

உர்—உறு—இறு—இற. இறத்தல்=சாய்தல், சரிதல்.

இற—இறப்பு=இறவாணம், இறவாரம். "இறப்பிற் றுயின்று" (திருக்கோ. 328).

இற—இறவு=1. (வளைந்த) இரு. "கடலிறவின் சூடு தின்றும்" (பட்டினப். 63). 2. (வட்டமான) தேன்கூடு. (ஞானவா. தாமூர. 69).

இற—இரு=இருல். "கயலொடு பச்சிருப் பிறழும்" (பெரும்பாண். 270).

இரு—இருல்=1. இரு. 2. தேன்கூடு (நள. கலிநீங். 14). 3. நளி (கார்த்திகை). (திவா.)

இரு—இருட்டு=1. இருல். 2. தேன்கூடு. 3. கை விருட்டை.

இருட்டு—இருட்டை=நூல் நூற்கும் சக்கரம்.

இருட்டு—இருட்டினம்=1. நூற்கும் சக்கரம். 2. நீரிறைக்கும் உருளி. 3. விளையாட்டுச் சுழல் தேர் அல்லது குடை. 4. பஞ்சரைக்கும் பொறி.

இறவு—இறகு—சிறகு—சிறகர். இறகு—இறகர்.

இறகு—இறக்கை—தெ. ரெக்க.

இற—இறை=1. இறவாணம். "குறியிறைக் குரம்பை" (புறநா. 129), 2. மூலை. "முடங்கிறை" (முல்லை. 87). 3. வளைந்த (பெண்டிர்) முன்கை. "எல்வளை யிறையூ ரும்மே" (கலித்.) 7. இறகு. (பிங்.) 8. சிறகு.

இறைதல் = வணங்குதல். "இணையடி யிறைமின்" (பதினோ. ஆளு. திருக்கலம். 48).

இறை — இறைஞ்சு. இறைஞ்சுதல்=1. வணங்குதல். "எழிலார் கழலிறைஞ்சி" (திருவாச. 1 : 21). 2. தாழ்தல். "தலையிறைஞ்சிய கோட்டாழை" (புறநா. 17). 3. வீழ்ந்து கிடத்தல். "புல்லுவிட் டிறைஞ்சிய பூங்கொடி" (கலித். 3 : 13).

———

# திருமணி விளக்கின் அலைவாய்

[பேராசிரியர் கோ. வே. பெருமாள், எம்.ஏ. பி.டி.,]

"கண்காணி இல்லென்று கள்ளம் பலசெய்வார்;
கண்காணி இல்லா இடமில்லை! காணுங்கால்,
கண்காணி ஆகக் கலந்(து) எங்கும் நின்றானைக்
கண்காணி கண்டார்; கள(வு) ஒழிந் தாரே!"[1]

முன்னுரை :

இந்நாளில் 'திருச்செந்தூர்' பேரழகு வாய்ந்த திருநகராகவே திகழ்கின்றது.[2] அது, தமிழ்நாடு பெற்றுள்ள தனிச் சிறப்பு வாய்ந்த சீரூர்களில், தனி சிறப்பு வாய்ந்தது என்பர்! கடற் கரை முன்றிலிலே, ஒப்பற்ற மணற் குன்றிலே, அமைந்த முழையிலே எழுந்த 'திருக்கோவில்' என்பர்!! அஃது, 'எக் காலத்தில் எழுந்தது?' என்று எண்ண வியலாத பழைமையைப் பெற்று விளங்குகின்றது! இப்பொழுது, இதன் வேல்தாங்கி உயர்ந்த ஒன்பது நிலைக் கோபுரம், நிலத்திலே, 10 கி. மீ. தூரத்தே வருவார்க்கும் தெரிகின்றது; கடலிலே 20 கி. மீ. தூரத்தே கப்பலில் செல்லும் மாலுமிகளுக்கும் 'கலங்கரை விளக்கம்' போன்று காட்சி தருகின்றது! இந்நல்லிடம், வேனில் காலத்திலே வெப்பந் தணிக்கும் விழுமிய புகலிடமாக விளங்கு கின்றது; உடல் நலன் பேணுவதற்கு உற்ற இடமாக உதவு கின்றது; பிணிகள் பலவற்றைக் குணப்படுத்தும் குன்றமாக அமைந்துள்ளது; மனத்தூய்மை விளைவிக்கும் மாசற்ற மன்ற மாக நிலை பெற்றுள்ளது! திங்கள்தோறும், கிழமைதோறும் இங்கே நடைபெறும் திருவிழாக்கள், மக்கள் வருகையை மென்மேலும் மிகுவிக்கின்றன. புதிது புதிதாகத் திருச்சுற்று மண்டபங்கள், மாடமாளிகைகள், வீடுகள், விடுதிகள் காலந் தோறும் கட்டப் பெற்றுள்ள காட்சி, ஓர் அழகிய மாநகர்க்கு உரிய மாட்சியைத் தருகின்றது. இவற்றின் இடையே அமைந் துள்ள 'முருகன் திருக்கோவில்', வந்து தொழுவார் அனைவர்க்கும் சிந்தை நிறைவு தந்து மகிழ்ச்சி யூட்டுகின்றது. 'அறிவியல்' பெருகிய இந்த இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே,

---

1. *திருமூலர் - திருமந்திரம்: 2067.* (திருவைகுண்டம் பதிப்பு).

2. Mr. H. R. Pate, ICS, Madras District Gazetteer - TINNEVELLY. (1917) Page, 505. "The beautiful city, Tiruchendur".

இவ்வாறு விளங்கும் இம் மாண்புத் திருக்கோவில், ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு எவ்வாறு நிலவியது? இந்த வினாவிற்கு உரிய விடை, ஓர் அகநானூற்றுப் பாடலிலே கிடைத்துள்ளது!

அகநானூறு :

தமிழிலக்கிய வரலாற்று ஆசிரியர்கள், சற்று முன் பின்னாக, கி மு. 2000 முதல், கி. பி. 200 வரையுள்ள கால வரம்பை, 'சங்க காலம்' என்று சாற்றுகின்றனர். இதனையே புலவர்கள் தமிழகத்தின் 'பொற்காலம்' என்று போற்றுகின்றனர். அந் நாட்களிலேயே 'தொல்காப்பியம்' என்னும் முதன்மை வாய்ந்த தமிழிலக்கண நூல் தோன்றியது; வெவ்வேறு இடங்களில், வெவ்வேறு காலங்களில், வெவ்வேறு புலவர்கள் பாடிய பாக்களை, பின்னாளில் 'பத்துப் பாட்டு' என்றும், 'எட்டுத் தொகை'[1] என்றும் தொகுத்து, 'சங்க இலக்கியங்கள்' அல்லது சங்க நூற்கள்' என்று போற்றி வருகின்றனர். அந்த 'எட்டுத் தொகை'[3] நூல்களில், ஒரு தொகுப்பு நூலே 'அகநானூறு' என்பது. இதனை, 'நெடுந்தொகை' என்றும் குறிப்பிடுவர். இதில் மொத்தம் 400 (நானூறு) பாக்கள் உள்ளன. இந்த அகநானூறு மூன்று பிரிவுகளாக அமைக்கப் பெற்றுள்ளது. முதல் 120 பாக்களைக் 'களிற்றி யானை நிரை' என்றும், இடையேயுள்ள 180 பாட்டுக்களை 'மணிமிடை பவளம்' என்றும், இறுதி 100 செய்யுட்களை 'நித்திலக் கோவை' என்றும் பெயரிட்டுத் தொகுத்துள்ளனர். அகன் ஐந்திணை நெறி தழுவிய இந்நூலின் 400 (நானூறு) பாக்களில் 1, 3, 5, 7, 9 என்னும் ஒற்றைப்படை எண்ணுள்ளன வெல்லாம் 'பாலை' பற்றியனவே; எஞ்சிய 2, 8 எண்ணுள்ளன வெல்லாம் 'குறிஞ்சி' பற்றியனவே; 4 எல்லாம் 'முல்லை' 6 எல்லாம் 'மருதம்' 10 எல்லாம் 'நெய்தல்' பற்றியனவேயாம். இவ்வாறு, அழகிய நெறியிலே 'அகநானூறு' தொகுக்கப் பெற்றுள்ளது!

பரணர் :

அப் பண்டை நாளில், பெரும்புலமை வாய்ந்த அரும் புலவர் பலர் வாழ்ந்திருந்தனர். அவர்களில் நக்கீரர், கபிலர்,

1. எட்டுத் தொகை நூல்களை உணர்த்தும் பழம் பாடல் :
"நற்றிணை, நல்ல குறுந்தொகை, ஐங்குறு நூ(று),
ஒத்த பதிற்றுப்பத்(து, ஓங்கு பரிபாடல்,
கற்றறிந்தார் ஏத்தும் கலியோ(டு) அகம்புறம்என்(று)
இத்திறத்த எட்டுத் தொகை".

பரணர் ஆகியோர் சிறப்பாகக் குறிப்பிடப் பெற்றுள்ளனர். அவர்களுள்ளும், 'பரணர்' பாரித்த புகழுக்கு உரியவராகவே காணப்பெறுகின்றார். காரணம், அவர் நீண்ட பல ஆண்டுகள் உடல் நலத்தோடும் உறுதி வாய்ந்த மனவலத்தோடும் வாழ்ந்துள்ளார். ஐந்து தலைமுறைக் காலம் வாழ்ந்து, அரசர் பலரைப் பாடியுள்ளார்; தமிழகத்தின் பல இடங்களுக்கும் சென்று, நேரிலே கண்டு பட்டறிந்துள்ளார். போக்குவரத்து ஊர்தி வாய்ப்பு மிக மிகக் குறைந்திருந்த அந் நாளிலே, அவர், ஆர்க்காடு, உறையூர், குறும்பூர், 'அலைவாய்' கூடல், தொண்டி, வஞ்சி, முசிறி முதலிய பல ஊர்களையும் கண்டு நுகர்ந்து பாடியுள்ளார். 'எட்டுத் தொகை' நூல்களில், இவர் பாடியுள்ளனவாக, 85 (எண்பத்தைந்து) பாக்கள்[1] காணப் பெறுகின்றன. அவற்றின்வாயிலாய், இவருடைய பரந்து விரிந்த உலகியல் உணர்வையும், நூலியல் அறிவையும் தெரிந்து கொள்ளலாம். இவர் பைந்தமிழகத்தின் பல ஆறு, மலை, ஊர்களைக் கண்டு அறிந்துள்ளார். சேர, சோழ, பாண்டியர் ஆகிய தமிழ் முடிமன்னர் மூவரோடும், குறுநில மன்னர் பலரோடும் பழகிய பட்டறிவு மிகுந்திருந்தார். இவை, இவர் பாடல்களால் புலனாகின்றன. இவை அனைத்தும் பழந்தமிழ் நாட்டின் வரலாற்று நிகழ்ச்சிக் கோவையாகவே மிளிர்கின்றன. எனவே, 'பரணர் வாழ்க்கை, பட்டறிவு வாழ்க்கை' எனலாம். இவரது அகப் பொருள் பற்றிய பாக்கள் எல்லாம், கற்பனை ஊற்றுக்களாகவே காணப் பெறுகின்றன. இவற்றில் புனைந்துரைக்கப் பெற்றுள்ள படைத்து மொழி ஆக்கக் கற்பனை[2]களும், அழகுணர் கற்பனை[3]களும் கற்பவர் மனத்திற்குக் கழிபேரின்பம் ஊட்டுவனவாக அமைந்துள்ளன.

மருதத்திணை :

பரணரின் அகத்துறைக் கற்பனைக்கு ஒரு சான்று காணலாம். அகநானூறு 266 ஆவது செய்யுள், 'மணிமிடை

---

1. சங்க இலக்கியம் : பாட்டும் தொகையும் - தொகுப்பும் பதிப்பும் : பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை (1940) பாரி நிலையம், சென்னை-1.

பரணர் பாக்கள் - 85. [புறநானூறு - 13, பதிற்றுப் பத்து - ஐந்தாம் பத்து-10; ஆக, புறம் - 23. நற்றிணை-12, குறுந்தொகை-16, நெடுந்தொகை (அகநானூறு) - 34; ஆக அகம்-62. எட்டுத்தொகை நூல்கள் ஐந்திலே பரணர் பாக்கள் 23+62=85 பாடல்கள் உள்ளன.]

2. Creative Imagination.

3. Aesthetic Imagination.

பவளம்' என்னும் தொகுப்பிலே அமைந்துள்ளது. ஆறு என்னும் எண், 'மருதம்' என்னும் திணைப்பொருள் உணர்த்துவது ஆகும். மருதத்திணையின் உரிப்பொருள், 'ஊடல்' என்பதே. 'கற்பு ஒழுக்கம்' ஆகிய இல்லற வாழ்விற்கு, இன்றியமையாத உப்பு போன்றது, 'ஊடல்' என்பர்![1] முப்பாலின் இறுதியே 'ஊடல் உவகை' அன்றோ? அதில், வள்ளுவர், "ஊடுதல் காமத்திற்கு இன்பம்'[2] என்று உணர்த்தியுள்ளார். சங்க இலக்கிய அகப்பொருள் சாற்றுகின்ற 'ஊடல்' காரணங்களில் ஒன்றாகப் 'பரத்தையர் பிரிவு' காணப் பெறுகின்றது! இப் புனைந்துரை வழக்கம், 'நாடக வழக்கின் பாடல் சான்ற புலன் நெறி'[3] என்று நாட்டப் பெறினும், தமிழரின் 'பண்பாடு' பழிப்பதற்கு உரியதாகின்றது! காதலன் தவறு செய்ததாகக் கற்பனை செய்து கொண்டு விளையாட்டாகவே, காதலி ஊடுகின்றாள்! ஆயினும், விளையாட்டிற்குக் கூட, இவ்வாறு காதலியை ஊடவிடுவது, விழுமியதாகத் தோன்றவில்லை.[4] ஆதலின், பரணர், இந்த மருதத்திணை (ஊடல்) பாடலின் வாயிலாக, வேறொரு விழுமிய மெய்ப்பொருளை—பண்பாட்டை—விளங்க வைத்துள்ளார் என்றே கொள்ள வேண்டும். எங்கும் நிறைந்துள்ள இறைவனுக்கு அஞ்சும் அச்சமே, அறிவின் தொடக்கம்

---

1. திருவள்ளுவர்—திருக்குறள் (1312) காமத்துப் பால்-கற்பியல்-புலவி (ஊடல்):2.

"உப்(பு)அமைந்த அற்(று)ஆல் புலவி; அதுசிறிது
மிக்(கு) அற்றுஆல் நீள விடல்,"

2. ஷை. ஷை. ஷை. ஊடல் உவகை (133) : 10.

"ஊடுதல் காமத்திற்(கு) இன்பம்; அதற்(கு) இன்பம்
கூடி முயங்கப் பெறின்" (1330)

3. தொல்காப்பியம் (999) பொருளதிகாரம் — அகத்திணையியல் (௫௩).

4. பர். மு. வரதராசனார் அவர்கள். 'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்:' பக்கம் - 59, 60. ['மருதத்திணையைச் சங்க நூல்கள் ஆகிய அகநானூறு முதலியவை கூறும் முறை வேறு; திருவள்ளுவர் நூல் கூறும் முறை வேறு. திருவள்ளுவர் கூறும் மருதத்தில் பரத்தை என ஒருத்தி இல்லை! ............பொருள் காரணமாக மகளிர் சிலர் ஒழுக்கத்தை விற்பதும் கூடாது; ஒழுக்கமற்ற அந்த மகளிரை ஆடவர் நாடுவதும் கூடாது. ............'வரைவின் மகளிர்' என்ற அதிகாரம் வள்ளுவரின் சீர்திருத்தத்தை விளக்குவது. ............ஆதலின், திருவள்ளுவர் முன்னோர் வகுத்தோதிய இலக்கணத்தையும் புறக்கணித்துப் பரத்தையர்க்குக் காமத்துப் பாலில் இடமில்லாமல் செய்தார்; நூலோர் மரபையே கடந்து புது வழி வகுத்தார்."]

என்பர்![1] இதனைப் 'பரணர்', ஓர் அழகிய கற்பனையால் புனைந்துள்ளார்.

ஓர் அழகிய கற்பனை :

ஓர் இளவேனிற் காலம் - இருள் புணர் காலை (வைகறை) நேரம் - நீர்ச் செழிப்பு வாய்ந்த சழனிகள் (மருதம்) சூழ்ந்த ஓர் உழவர் ஊரிலே - வளம் மிகுந்த மனையிலே, ஓர் ஊடல் நிகழ்ச்சியினை, 'பரணர்' படம் பிடித்துள்ளார்! கணவன் காலந் தாழ்த்து வந்தான்; காரிகை கண்டாள்! அவனோ, அவள் மீது அன்பு வளர, ஆசை மீதூர, காதல் கொண்டான்; அவளும் அவன்மீது அவ்வாறே காதல் கொண்டாள்; இருவரும் முறையே திருமணம் செய்து இல்லறம் நடத்தி வருகின்றனர்; இல்லிருந்து அன்பு வாழ்க்கை வாழ்ந்து வருகின்றனர். ஆயினும், கணவன் காலங்கடந்து இரவிலே வீடு வருவதை அவளால் பொறுத்துக் கொள்ள இயலவில்லை! காரணம், இஃதோ அவள் உரையாலேயே காணலாம் :

"தலைவ! நேற்று இச் சிற்றூர் எங்கும் ஒரே பழிப்புரை (அலர்) ஆகவே இருந்தது! நம் உற்றார் உறவினரின் அந்த இழிவுரைக் கம்பலைக்கு நீயே காரணம்! அக் கவ்வை ஒலிகளால், கவலை மிகுந்து துயரம் உற்றேன். அந்தப் பழிப்பு ஒலி ஆரவாரம், நீடூர்த் தலைவன் 'நவ்வி' என்னவன் அரிபண வாயில்—'உறத்தூர்' என்னும் இடத்திலே, பட்டப்பகலிலே, படை வீரர்களுக்குக் கொடுத்த பெருஞ்சோற்று விருந்திலே கள்ளுண்டு களித்தோர் ஆரவாரம்" போன்று இருந்தது!

'அண்மையில், தண்பொருநை ஆற்றிலே, கரைமோதிய புதுவெள்ள நீரிலே, ஆடல் மகளிரோடு விளையாடினாய்; வலிமை மிகுந்த களிறுபோலத் தெப்பட்டுணை தழுவி நீராடல் நிகழ்த்தினாய்; நரந்தம் பணக்கும் கருங்கூந்தலை உடைய இளம் பெண்களோடு நீரை அள்ளி வீசி ஆடினாய்! அந்த ஈர உடை அழகிகளின் கரிய கண்கள் உன்னைக் கண்டு சுவைத்த பொழுதெல்லாம் — நோக்குதொறும் நோக்குதொறும் — வேட்கை தணியாளுய் விருப்பம் மிகுந்து, காமப் பெரும் மயக்கத்தில், நாணம் இழந்து, வெட்கம் இன்றி, அந்த ஆடல் அழகிகளோடு அகமகிழ்ந்து ஆடினாய்! உன் நெறிகெட்ட இந் நிலையைப் பலரும் சொல்லிப் பழித்தனராய்! இதுவே, அந்த ஆரவார அலருக்குக் காரணமாய் அமைந்தது!' என்று கேள்வியுற்றேன்!

1. Old Testament: "The fear of the Lord is the beginning of knowledge."

இப்பொழுது, எனக்கு, அதுகூடத் துன்பமாகத் தோன்ற வில்லை! ஆனால், நாம் உறுதி மொழி ஆணை செய்துகொண்ட ஒப்பற்ற இடத்தை நினைத்தால், கவலைமிகுந்து துயரம் தோன்றுகின்றது! வயல்களில் உழவரின் ஆரவாரத்திற்கு அஞ்சி, மயில் பறந்து சென்று அழகாகத் தங்குகின்ற அச்சந் தரும் தெய்வக் குன்றினிடத்தே, அழகிய மணிவிளக்கு ஒளிரு கின்ற 'அலைவாய்' என்று அழைக்கப்பெறுகின்ற சீரிடத்திலே, போர் மிகு செவ்வேள் — 'சேய்' என்னும் கடவுள் முன்னிலை யிலே, நாம் திருமணம் புரிந்தோம்; அப்பொழுது, 'உனக்கு நான் எனக்கு நீ' — 'ஈருடல் ஒருயிர்' — ஆக வாழ்வோம் என்று ஆற்றல் மிக்க சேய்மீது ஆணையிட்டுச் சூளுறவு செய் தோம்!''

" ... ... ... ...
கோடுற நிவந்த நி(டு)இரும் பரப்பின்
... ... புதப்புனல் ...
மைந்துமலி களிற்றின் தலைப்புணை தழீஇ,
நரந்தம் நாறும் குவைஇரும் கூந்தல்
இளந்துணை மகளிரோ(டு) ஈரணிக் கலைஇ,
நீர்பெயர்ந்(து) ஆடிய ஏந்(து)எழில் மழைக்கண்
நோக்குதொறும் நோக்குதொறும் தவர்(வு)இல ஆகிக்
காமம் கைம்மிகச் சிறத்தலின், நாண்இழந்(து)
ஆடினை என்ப; மகிழ்ந! அதுவே,
... ... — —
கள்ளுடைப் பெருஞ்சோற்(று) எல்இமிழ் அன்ன
கவ்வை ஆகின்றால் பெரிதே! இனி அஃ(து)
அவலம் அன்றுமன் எமக்கே; அயல
கழனி உழவர் கலிசிறந்(து) எடுத்த
கறங்கிசை வெரீஇப் பறந்த தோகை
அணங்(கு)உடை வரைப்(பு)அகம் பொலியவந்(து) இறுக்கும்
திருமணி விளக்கின் அலைவாய்ச்
செருமிகு சேஎய்ஒடு உற்ற சூளே.''[1]

மெய்ப்பொருள் :

இந்தப் பரணர் அகப்பாடலால் நாம் புரிந்து கொள்வது என்ன? சிறு கதை போன்றே நிகழ்ச்சி ஒன்றை, அவர் இங்கே

1. பரணர்: அகநானூறு — 266 (மருதம்); மணிமிடை பவளம். 'பரத்தையின் பிரிந்து வந்து கூடிய தலைமகனுக்குத் தலைமகள் சொல் லியது, கவ்வை, அலர், கம்பலை, பழிப்புரை—ஒரு பொருட் சொற்கள். சேய் - செவ்விய முருகன். சூள் = ஆணை, oath தோகை-மயில்.

புனைந்துரைத்துள்ளார்! அழகிய கற்பனையேதான்! ஆயினும், தெய்வபயம்—கடவுள் அச்சம் தேவையே என்பதைத் தெளிவு படுத்தியுள்ளார். சிறப்பாக, மிகப் பழங் காலத்திலேயே 'திருச்செந்தூர்' 'அணங்குடை வரைப்பகம்' ஆக, கருதப் பெற்றிருந்த பெற்றியை மிக அழகாகவே கட்டுரைத்துள்ளார். 'அங்கு இங்கு எனாதபடி எங்கும் நிறைந்துள்ள' இறைமையை* —அது இது எனாதபடி எல்லாம் அறியவல்ல வாலறிவை† அப்படி இப்படி எனாதபடி எல்லாம் ஆற்றவல்ல இயற்கை வன்மையை‡ முழுமை வாய்ந்த முழுகியலை §எல்லாவற்றையும் கண்காணிக்கவல்ல கடவுளை எண்ணிப் பார்க்க இயலும் எவர் உள்ளமும் தீயவை தீண்டா —பழி பிறங்கா — என்பது திண்ணம் அன்றோ? எனவே, பரணர் அறிவு ஆற்றல் வாய்ந்த இறைமையின் அடையாளமாக — இலச்சினையாக — 'அலைவாய்ச் சேய்' யை எடுத்துக் கொண்டார் போலும்! 'அங்கே எடுத்துக் கொண்ட சூளைப் புறக்கணித்தால், இல்லற வாழ்வு என்னாகும்?' என்ற கேள்வியைத் தொடுத்துள்ளார்! இதனால், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே இலக்கிய 'திருச்சீர் அலைவாய்' — 'திருச்செந்தூர்க் காட்சியை நம கண் முன்னர்க் கொண்டு வந்து காட்டுகின்றார்!

திருச்செந்தூர் ;

திருநெல்வேலி மாவட்டத்தின் கிழக்கு எல்லை, கடற்கரையே ஆகும். இதன் மேற்கு எல்லையாக விளங்கும் 'பொதியமலை'யிலே பிறந்து, 120 கி.மீ. ஓடிவரும் பொன்னினும் சிறந்த பொருநை (தாமிரவருணி)யாறு மன்னார் வளைகுடாக் கடலிலே, புன்னைக்காயல் பக்கத்திலே, கலக்கின்றது! ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர், இதன் பக்கத்திலே இன்று மிகவும் சிற்றூராகக் காட்சி தருகின்ற கொற்கை (கொல் + கை) முற்காலத்திலே, மிகவும் சிறப்புவாய்ந்த துறைமுக நகராக— பாண்டியரின் கோநகராகவே திகழ்ந்தது; முத்து வாணிகத்திலே, உலக முதன்மை பெற்று விளங்கியது; இப் பழஞ் சிறப்பை, இன்று இதன் வடபால் உள்ள 'தூத்துக்குடி' பெற்று வயங்குகின்றது! இன்று 'மன்னார் வளைகுடா' என்று வழங்கும் பகுதி, அன்று 'கொற்கை வளைகுடா' என்று கூறப் பெற்றது![1] தண் பொருநைக் கழிமுகத்தின் தென்பால் சிறப்புற்று விளங்கும்

*Omnipresence; † Omniscience;
‡Omnipotence; § Almighty the God, Nature.

1. Mr. A. T. Stuart, M. C. S. — Manual of the Tinnevelly District (1879). Page - 42. [Magesthenes mentions it 302 B. C.

'திருச்செந்தூர்' என்றென்றும் 'செந்தமிழ் வழங்கும் திருநகரா'கவே திகழ்ந்து வருகின்றது. அன்று பரணர், இதனை 'அலைவாய்' என்றே குறிப்பிட்டுள்ளார்.

கடற்கரை எல்லாம், அலைவீசும் கவின்மிகு இடங்களாகவே காட்சி தந்திருக்கலாம். ஆயினும், நெய்தல் (கடற்கரை) நிலத்திலே, குறிஞ்சி (மலை) போன்று தோன்றும் மணற்குன்றின் அண்மையிலே, மருதம் (வயல் நீர் வளம்) வயங்கிய மாண்புமிகுந்த ஓர் அரிய இடம், சிறப்பு நோக்கி 'அலைவாய்' என்றே அழைக்கப் பெற்றுள்ளது. அங்கே, உழவர் கழனி (வயல்)களில் ஆரவாரத்தோடு உழுதொழிலில் ஈடுபட்டனர். அந்த ஆரவாரத்திற்கு அஞ்சிய மயில் (தோகை) அங்கிருந்து பறந்து சென்று குன்றிலே வந்து அழகாகத் தங்கும் இயல்பினைப் பெற்றிருந்தது. அங்கே அலை பாயும் விளிம்பு ஆகக் கடற்கரை காட்சி தந்தது போலும்! தமிழ் முன்னோர் அவ்விடத்தை, 'அலைவாய்' என்று அகமிக மகிழ்ந்து அழைத்தனர்; பின்னர் முறையே 'சீரலைவாய்' — திருச்சீரலைவாய்' (திரு+சீர்+அலை+வாய்)—செந்தூர்—திருச்செந்தூர் என்றனர். அந்த 'அணங்குடை வரைப்பகம்' ஆகிய குன்றிலே, அழகிய குகை (முழை) ஒன்று இருந்தது![1] அதன் உள்ளே ஓர் அழகிய அணையா விளக்குப் பேரொளி வழங்கிக் கொண்டிருந்தது! அங்கே, 'சிவப்பு (சேய்) உருவம்' தெய்வத் தன்மை பெற்றுத் திகழ்ந்தது! கடமை மறந்த கயவரைத் தண்டிக்க வல்ல—தீயோரை ஒறுக்கவல்ல—தெய்வத் தன்மை (அணங்கு) உடைய திருக்கோவிலாக, அது விளங்கியது. ஆதலின், அக் கண்கண்ட கடவுளைச் 'செருமிகு சேய் என்றனர். இந்த நம்பிக்கையால், அவ் வட்டார மக்கள், திருமண வரைவு உறுதிமொழி ஆணை எடுத்துக் கொள்வதற்கு உற்ற இடமாகக் கொண்டிருந்தனர். எனவே, பரணர், அச் சீரிடத்தை, 'திருமணி விளக்கின் அலைவாய்' என்று சீராட்டிச் சாற்றியுள்ளார்.

---

The Greeks Named the Gulf of Mannar from this place "Col - Chic Gulf".]

1. திரு. ம. அ. முருகேசன், பி. ஏ., பி. எல், கட்டுரை: 'திருச் செந்தூர்' திருக்கோவில் — தை 1975. [பாண்டியர் காலக் குகைக் கோவில்கள்: திருச்செந்தூரின் தென்பால் உள்ள மணப்பாடு என்னும் கடற்கரை மேட்டிலும் ஒரு குகை காணப்பெறுகின்றது. செந்தூரின் இப் பழங் கால முறைமையிடமே, இன்று முருகன் உருவச்சிலை இருக்கும் திருக்கோவிலாகத் திகழ்கின்றது என்பர்! இத் திருக்கோவிலின் வடபால், இன்றும் ஒரு சிறிய குகை உள்ளது. இதனை 'வள்ளி குகை' என்கின்றனர்.]

நிறைவு :

'இன்னது' என்று மக்களால் புரிந்துகொள்ள இயலாத 'இறைமை உண்மை'யை—மூடி மறைக்க இயலாத கடவுள் கண்கள் ஆகிய 'மெய்யுணர்வினை' — உணர்த்துதற்குப் பரணரின் இம் மருதத்திணைப் பாடல் உதவுகின்றது. இதன் வழியே, 'தெய்வ அச்சம் தேவை' என்று தெரிந்து கொள்கின்றோம்; பழந்தமிழர் பண்பாட்டினையும், நாகரிகத்தினையும், புரிந்து கொள்கின்றோம்; பழங்காலத் 'திருச்செந்தூரை'ப் பார்த்துக் கொள்கின்றோம்!

" ... ... ... ...
யார்அறி வார்இல அகலமும் நீளமும்!
பேர்அறி யாத பெருஞ்சுடர் ஒன்(று) அதன்
வேர்அறி யாதே விளம்புகின் றேனே!"[1]

---

## வடிவேல் முருகா வருகவே

ஓடைக் குளிர்தண் துளிப்பனியால்
உடைந்து திரையில் தவழ்ந்தேறி
ஒளிரும் புளினத் திடைபொதுங்கி
உறங்குங் கமடம் தனைக்கடந்து
கோடைக் குளிர்காற் றடிக்கஉடல்
கொடுகி நடுங்கி ஊன்கழிந்த
குடக்கூன் பணிலத் துட்புகுந்து
குஞ்சுக் கிரங்கி இரைகொடுக்கும்
பேடைக் குருகுக் கொருசேவற்
பெரிய குருகின் சிறைப்புறத்துப்
பிள்ளைக் குருகு தனையணைத்துப்
பிரச மடற்கே தகைப்பொதும்பின்
வாடைக் கொதுங்குந் திருச்செந்தூர்
வடிவேல் முருகா வருகவே!
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே!

—(திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ். அ)

---

1. திருமூலர் — திருமந்திரம் — பாடல்: 85. திருவைகுண்டம் பதிப்பு.

# அருணகிரியாரின் அருள் நுகர்ச்சி

[என். கே. வேலன், பி. ஏ.]

பற்றற்ற நிலையில் விளையும் பேரின்ப நலத்தை அடியேனுக்கு உபதேசித் தருளவேண்டும் என முருகப்பெருமானிடம் அருணகிரியார் வேண்டுகின்றார். தாம் அடைந்த அநுபூதி இன்பத்தில் திளைத்தவராய்த் தம்மை இழந்த நலத்தைப்பற்றிப் பேசுகின்றார். எல்லாம் அற்றபோது தன்னை இழந்த நிலை வருகின்றது.

*"தன்னை மறந்தாள் தன்நாமம் கெட்டாள்"*

என்பது அப்பர் வாக்கு.

*"தந்தது உன்தன்னைக் கொண்டது*
*என் தன்னை"* —மணிவாசகர்.

மயிலையும், வேலையும், சேவலையும் பாடும் பணியை எனக்குக் கொடுத்தருள வேண்டும் என்கின்றார். வேல் முருகப்பெருமானுடைய ஞானசக்தியாகும். எல்லாவற்றையும் வெல்வது வேல். சேவல் விடியற்காலையில் கூவிக் கதிரவன் வரவை உணர்த்துவதுபோல் முருகனுடைய சேவல் ஞானசூரியனாகிய முருகனுடைய வரவை உணர்த்துகின்றது. அறியாமை என்ற இருளைப் போக்குகின்றது.

*"கோழியோங்கிய வென்றடு விறற்கொடி*
*வாழிய பெரிதென்று"*

தெய்வ மகளிர் பாடி ஆடுவதாகத் திருமுருகாற்றுப்படையில் வருகின்றது.

மயில் ஓங்கார வடிவமாக இருக்கின்றது.

*"ஆன தனிமந்தர ரூபநிலை கொண்டது*
*ஆடும் மயிலென்ப தறியேனே"* — திருப்புகழ்.

ஆறுமுகப் பெருமானே, மெய்ப்பொருளை யான் அறியுமாறு அருள்புரிய வேண்டும் என வேண்டுகின்றார். ஆன்மபக்குவ நிலையறிந்து ஆண்டவன் குருநாதனாகத் தோன்றி ஆட்கொள்வான் எனக் கூறுகின்றார்.

*"அறிவை யறிவது பொருளென*
*அருளிய பெருமாளே"*

எனத் திருப்புகழில் பாடுகின்றார்.

வேலாயுதக் கடவுளே, பந்தபாசத்தில் கட்டுண்டு அலேயாமல் காத்தருள வேண்டும் என வேண்டுகின்ருர். உலகப்பற்று அறுதலே மாயையை வென்றதாகும். அந்த நிலேயில்தான் ஆணவம் ஒடுங்கும். இதற்கு ஞானமாகிய வேல் உதவுகின்றது. சூரர் குலத்தை வேலினுல் அழித்த முருகனது அருள் பெற்ருல் பந்தபாசங்களிலிருந்து விடுதலே பெறலாம் என உபதேசிக்கின்ருர்.

ஆறுமுகப் பெருமானுடைய திருப்பெயரைப் பலகாலும் ஓதி உலக மாயையினே வெல்லுதல் வேண்டும். உலகம் தோன்றி ஒடுங்குவதற்குக் காரணமாய் நிற்பது மாயை.

மாயையில் ஒடுங்குவது சிறப்பன்று என்றும் சிவத்தில் ஒடுங்குவதே சிறப்பானதென்றும் வற்புறுத்தப்படுகின்றது. 'ஆறுமுகம், ஆறுமுகம்' என்று பன்முறை ஓதாமல் உலக மாயையுள் அகப்பட்டுக் கலங்குவதோ என வினவுகின்ருர். உலக மாயை என்பது விணேக்குப் பற்றுக்கோடாய் இருந்து விணேயால் கட்டுண்ட ஆன்மாக்களே மயக்குகின்றது. மக்கள் உலக மாயையில் நின்று தயங்குகின்றனரே என இரங்குகின்ருர்.

வள்ளி மணுளரே, உம்முடைய திருவடித்தாமரைகள் எனது நெஞ்சில் மலரும்படி அருள்புரிய வேண்டும் என்கின்ருர். ஆண்டவனது பெருங் கருணேயை வியந்து போற்றுகின்ருர். தமது கல்போன்ற மனத்தில் முருகனது திருவடித்தாமரை அரும்பிவிட்டதே என மகிழ்கின்ருர். எல்லேயற்ற கருணேயினுல் கல்லும் கனிந்து தாமரை மலர்கின்றது.

வள்ளியம்மையை இச்சா சக்தி என்பர். ''சக்தியின்றிச் *சிவமில்லே*'' என்பது ஆன்ருேர் வாக்கு. இறைவன் சக்தியின் ஆணேயை எதிர்பார்த்துப் பணிந்து நிற்கிருன். உள்ளன்புடன் இருப்பவர்க்கு இறைவன் ஏவல் புரியும் தொண்டனுக வருவான்.

*''கூப்பித் தொழுவார்தம் குற்றேவலேக்*
*குறிக்கொண்டிருக்கும் குழகா போற்றி''* —*அப்பர்.*

பரிபக்குவ ஆன்மாவை இறைவனே குருநாதனுகச் சென்று ஆட்கொள்கிருன். வள்ளி முருகப்பெருமானேயே நாதனுக அடையத் தவம் செய்தவள். முருகன் அருளால் பூமியில் வந்து தோன்றி முருகனே மணந்து பேறு பெற்றவள். இறைவனே நினேந்து நினேந்து உருகும் அடியாருடைய உள்ளத்தில் இறைவன் புகுந்து உறைவான்.

"நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும்பொன் னார்சடைப் புண்ணியன்" —தேவாரம்.

அருணகிரியார் மனத்திற்கு அறிவுரை கூறுகின்றார். "மனமே, பிழைக்கும் வழியாதெனில் ஈதலும் இறைவனை நினைத்தலும் ஆகும். அங்ஙனம் செய்தால் பிறவித் துன்பத்தைப் போக்கி வினைகளிலிருந்து நீங்கி அநுபூதி பெறலாம்" என்கிறார்.

கரவாது கொடுப்பவர்களுக்கு இறைவன் எளியனாகின்றான். அடியார்க்கு அளிப்பதே கடவுளுக்கு அளிப்பதாகும்.

"நடமாடும் கோயில் நம்பர்க்கொன் றீயின்
படமாடும் கோயில் பகவற்க தாமே" —திருமந்திரம்.

"மிக்க அறமே விழுத்துணை யாவது"

என்பது மணிமேகலை.

"கரவார்பால் விரவாடும் பெருமானை" —தேவாரம்.

எப்பொழுதும் இறைவன் தாளினையே நினைக்கவேண்டும்.

"இமைப் பொழுதும் என்நெஞ்சில்
நீங்காதான் தாள்வாழ்க." —மணிவாசகர்.

பிறவித்துன்பம் நெடுங்காலமாக உயிருக்குள்ள துயரமாகும். உயிர் இறப்பதும் பிறப்பதுமாகவே உழன்று வேதனைப் படுகின்றது. அதனால் பிறவித் துன்பத்தைப் போக்குவதற்கு வழிகாட்டுகின்றார் அருணகிரியார்.

தனக்கென்று வைக்காமல் பயனுள்ள அறங்கள் செய்வதாலும் இடையறுக் கடவுள் சிந்தனையாலும் பிறவித்துன்பம் விலகும். அறம் செய்யும்போது யான், எனது என்ற செருக்கற்று இருத்தல் வேண்டும். ஆண்டவன் அளித்த செல்வத்தை ஆண்டவனுக்கே படைப்புச் செய்தல் வேண்டும்.

"வையிற் கதிர்வேலனை வாழ்த்தி வறிஞர்க்கு என்றும்
நொய்யிற் பிளவள வேனும் பகிர்மின்கள்."
—கந்தரலங்காரம்.

புண்ணியம் செய்யும்போது பயன் கருதாது செய்தல் வேண்டும். மணிவாசகரும் பின்வருமாறு நெஞ்சுடன் பேசுகின்றார் :—

"வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே வல்வினைப்பட்டு
ஆழ்கின்றாய் ஆழாமற் காப்பானை ஏத்தாதே
சூழ்கின்றாய் கேடு உனக்குச் சொல்லுகின்றேன் பலகாலும்
வீழ்கின்றாய்நீ அவலக் கடலாய வெள்ளத்தே"

(தொடரும்)

# சங்க இலக்கியத்தில் ஆடை அணிகலன்கள்

[பி. எல். சாமி, ஐ. ஏ. எஸ்.]

(சிலம்பு-டுஉ: ௩௬ ஆம் பக்கத் தொடர்ச்சி)

ஒலியல் என்ற துகிலாடை பரிபாடலிலும் சிலப்பதிகாரத்திலும் கூறப்பட்டுள்ளது. இந்த ஒலியல் ஆடை சங்க காலத்திலும் இருந்திருக்கின்றது.

"உடையு மொலியலுஞ் செய்யை மற்றுங்கே
படையும் பவழக் கொடிநிறங் கொள்ளும்"

—பரிபாடல். 19 : 97-98

சிவந்த உடையையும் சிவப்பு நிறத்தையுடைய ஒலியல் என்ற மேலாடையையும் செவ்வேள் அணிந்திருந்தான் என்று பரிபாடலில் கூறப்பட்டுள்ளது. பிங்கலந்தை நிகண்டு ஒலியல் ஒரு வகை ஆடை என்றும், தோல் என்றும் கூறியுள்ளது. 'திண்டேர் பிரம்பிற் புரளுந் தானை' (435) என்ற மதுரைக் காஞ்சி வரிக்குச் செவ்வேள் தோளிலே கிடந்தசையும் ஒலியலினையும் என்று உரை கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். செல்வர் சிவந்த கலிங்கத்தையும் தோளிலே கிடந்தசையும் ஒலியலையும் அணிந்திருந்தனர் என்று மதுரைக் காஞ்சி கூறுவதால் ஒலியல் அங்க வஸ்திரம் போன்ற துகிலாடை என்று தெரிகின்றது. 'புடை வீழ் துகில் இடவயின் தழீஇ' என்ற நெடுநல்வாடை (181) வரிக்கு இடத்தோளினின்று நழுவி வீழ்ந்த அழகினையுடைய ஒலியலை இடப்பக்கத்தே யணைத்துக் கொண்டு என்று நச்சினார்க்கினியர் உரை கூறியுள்ளார். இந்த ஆடையைப் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் அணிந்திருந்தான் என்று நெடுநல்வாடை கூறியதைக் கவனிக்க வேண்டும். அரசரும் செல்வரும் இத்தகைய ஒலியல் துகிலாடையைத் தோளில் அணிந்தனர் என்பது தெரிகின்றது. மதுரைக் காஞ்சியில் இதைத் தானை என்று குறிப்பிட்டிருப்பதைப் பார்க்கலாம். இக் காலத்திலும் பெண்டிர் தோள் மேலிருந்து இறங்கிவரும் சேலைப் பாகத்தை முன்தானை என்று கூறுவதை இது சார்பாக ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். இதே நெடுஞ்செழியன் ஒலியல்மாலை என்ற ஒருவகை மாலையை அணிந்திருந்ததாகப் புறநானூறு (76) கூறுகின்றது. வேப்பம்

பூவின் தளிரை உழிஞைக் கொடியில் கட்டிய மாலையை வளைய மாலையாக அணிந்ததாகக் கூறப்பட்டுள்ளது. தோளில் அணிந்த இந்த மாலை நுனிகள் சேராத மாலையாகும். ஒலியற் கண்ணி (புறம் 201, 202), ஒலியல் மாலை (சிலம்பு. 26-109) ஆகிய மாலைகளும் இத்தகையவையாக இருக்கலாம். ஒலியல் என்பதற்குத் தழைத்த என்று உரை கூறியிருப்பினும் ஒலியல் மாலை என்பது ஒருவகைச் சிறப்பான மாலையாகும். அகநானூற்றில் (102) 'ஒலியல் வார்மயிர் உளரினள் கொடிச்சி' என்று வரும் வரியில் தோள்மேலே புரண்டு தொங்கிய நீண்ட மயிரைக் கோதினள் என்று பொருள் கொள்ள வேண்டும். தழைத்த என்று பொருள் கூறினும் ஒலியல் போலத் தொங்கிய என்பதே பொருத்தமாகும். 'தழையத் தழையக் கட்டுதல்' என்ற பேச்சு வழக்கில் இன்றும் தொங்கிய என்ற பொருள் இருத்தலைக் காணலாம். 'சுள்ளவக்கா' என்ற நூலில் 'வீலிவ' என்ற ஒரு வகைத் துகில் கூறப்பட்டுள்ளதைக் குறிப்பிட்டுள்ளேன். இந்த 'வீலிவ' என்ற பெயர் ஒலியல் என்ற தமிழ்ப் பெயரிலிருந்து தோன்றியிருக்கலாம். கோயிலொழுகில் 'ஒலியன்' என்ற ஆடை சிறந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

சங்க காலத்திலேயே பட்டாடையைப் போற்றினரென்பது தெரிந்ததாகும். கோசிகம் என்ற பட்டாடை சங்க காலத்திலேயே இருந்திருக்கலாம்.

"பைங்காற் பாதிரிப் போதுபிரிந் தன்ன
அங்கோ சிகமும் வங்கச் சாதரும்"

—பெருங்கதை 148 : 204.

"கோசிக ஆடை பூத்தன பாதிரி" —சிந்தாமணி 1650.

பாதிரியின் பொன்னிறமான பூ கோசிக ஆடைக்கு ஒப்பிடப் பட்டிருப்பதால் கோசிக ஆடை பொன்னிறமானது என்பது தெளிவாகின்றது. பெரும்பாணாற்றுப்படை (வரி 3-6) யாழின் பத்தரை மூடியுள்ள நிறமூட்டப்பட்ட தோல் பாதிரிப்பூவின் நிறத்தைப் போல இருந்ததாகக் கூறியுள்ளதைப் பார்க்க வேண்டும். "புதுவது போர்த்த பொன்போற் பச்சை" (வரி. 28.) மலைபடுகடாம் இந்தத் தோலைப் பற்றிக் கூறியுள்ளது. ஆதலின் கோசிக ஆடை பாதிரிப்பூ நிறம்போலப் பொன்னிறமானது என்பது தெரிகின்றது. கோசிக ஆடை காசியில் தோன்றிய ஆடையாகும். வடநூல்களில் 'கோசிய' என்றழைக்கப் பட்டது. கௌடிலியர் எழுதிய அர்த்த சாத்திரத்தில் 'சினபட்டா' என்ற சீனப்பட்டுடன் கோசிப்பட்டையும் கூறியுள்ளது. (koutilya says kouseya along with china patta

china bhurnija) பாலி நூல்களில் 'கோசிக' என்றும் 'கோசெய' என்றும் அழைக்கப்பட்டுள்ளது. பௌத்த நூல்களில் காசியில் நெய்த ஆடைகள் மிகச் சிறந்தவையாகக் கூறப்பட்டுள்ளன. 'காசிவத்தம், காசிகுட்டமம்' என்ற ஆடைகள் பௌத்த நூல் களில் கூறப்பட்டுள்ளன. அர்த்த சாத்திரத்தில் கோசிய ஆடையைத் துகிலென்றும் கூறியுள்ளதைக் காணலாம். மதுரை (madhura) அபராந்த, காசி, வங்கா, வத்சா, மகிசா ஆகிய நாடுகளில் நெய்யப்பட்ட துகில்கள் சிறந்தவை என்று கூறப்பட்டுள்ளது. ஆயினும் சீனப்பட்டுடன் கோசிகப்பட்டை வேறு இடத்தில் குறிப்பிட்டிருப்பதால் கோசிக ஆடை பட்டாடை என்பதில் ஐயமில்லை. இன்றும் காசியில் நெய்யப்படும் பட்டாடைகள் சிறந்தவையாகக் கருதப்படுகின்றன. நேத்திரம் என்ற பட்டாடை தேவாரத்தில் கூறப்பட்டுள்ளது.

"காம்பினொடு நேத்திரங்கள் பணித்தருள வேண்டும்"

—சுந்தரர் 46-2.

சுந்தரர் சிவபெருமானிடமிருந்து கேட்ட சிறந்த உயர்ந்த ஆடைகளாகக் காம்பும் நேத்திரமும் கூறப்பட்டுள்ளன. நேத் திரம் என்ற ஆடைப்பெயர் வடமொழி நூல்களிலும் வருகின்றது. ஹர்ஷசரிதம் என்ற நூலில் அரசனின் தங்கையின் திருமணத் திற்கு வந்த வரிசைப் பொருள்கள் கூறப்பட்டுள்ளன. ஆடை களில் சோமா, லாடதாண்டுஜா, துகூல, நேத்ரா, அம்சுகா என்ற சிலவகை ஆடைகள் கூறப்பட்டுள்ளன. நேத்ரா என்ற ஆடை எதுவென்று தெளிவாகத் தெரியவில்லை என்று அறிஞர் மோட்டி சந்திரா கூறியுள்ளார். நேத்திரம் என்பது பொற் சரிகை கோத்து நெய்த பட்டாடை என்று cowell என்ற மேல் நாட்டு அறிஞர் கூறியுள்ளார். இஃது ஒருவகைப் பட்டு என்று வடநூல் உரை கூறியுள்ளது. சூக்குமப் பட்டு ஆடை என்ற விளக்கம் கூறப்பட்டுள்ளது. மற்றும் நீலநேத்திரம் என்ற ஆடையும் கூறப்பட்டுள்ளது. நேத்திரம் என்ற ஆடை உள்ளே இருப்பதை வெளியே காட்டும் வண்ணம் மென்மையாக நெய்யப்பட்டதென்றும் வெண்மையானதென்றும் பாற்கடலில் வீசும் அலையைப்போல இருந்ததென்றும் 10ஆம் நூற்றாண்டு நூலான நளசம்பு கூறியுள்ளது. இவற்றிலிருந்து நேத்திரம் என்பது ஒரு சிறந்த பட்டாடை என்பது விளங்குகின்றது. கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த சுந்தரர் நேத்திரம் என்ற பட்டாடையைக் கூறியுள்ளார். நேத்திரம் என்ற சொல் கண்ணைக் குறிப்பிடுவதாகும். கண்ணால் நோக்கினால் நூலிழைக்குள் ஊடுருவிப் பார்க்க முடியாதபடி அவ்வளவு நுண்மையாக நெய்யப்பட்ட ஆடையாக இருக்கலாம்.

"நோக்கு நுழைகல்லா நுண்மையான" ஆடையே நேத்திரம் என்ற கண்ணைக் குறிக்கும் சொல்லால் அழைக்கப்பட்டது என்று கருதலாம். இதனால் இதைச் 'சூக்குமப்பட்டு' என்று வட மொழியில் கூறினர். நேர்த்தியாக நெய்யப்பட்ட உயர்ந்த வகை வேட்டியை மயில்கண் வேட்டி என்றழைத்துவந்த வழக்கைக் கவனிக்க வேண்டும். மயிலிற்குக் கூர்ந்த பார்வையும் உற்றுப் பார்க்கும் பழக்கமும் உண்டு. ஆதலின் 'போழ்கண்' என்று மயிலின் கண்ணைக் குறுந்தொகைப் பாடல் (391) குறிப் பிடுகின்றது. மயில்கூடத் தனது கூர்ந்த கண்ணால் பார்த்து ஊடுருவிப் பார்க்க முடியாதபடி நுண்மையாக நெய்யப்பட்ட வேட்டியை மயில்கண் வேட்டி என்றனர் போலும். "கண் கொளாப் பட்டுடுத்தாள்" என்று சீவக சிந்தாமணி (2444) கூறி யிருப்பதால் இந்தப் பட்டும் நேத்திர ஆடையாகவே இருக்க லாம். சுந்தரர் நேத்திரப் பட்டுடன் 'காம்பு' என்ற ஆடையை யும் கூறியுள்ளார். காம்பு என்பது ஒருவகைப் பட்டாடை என்று கூறுவர். ஆனால், அது சிறுபாணாற்றுப்படையில் குறிப் பிட்ட துகிலாடையாகவே இருக்க வேண்டும். "காம்பு சொலித் தன்ன அறுவை" என்று சிறுபாணாற்றுப்படை (236) கூறி யுள்ளது. இந்த அறுவையையே சம்பந்தர் காலத்தில் காம்பு என்ற பெயரால் அழைத்தனர் என்று தெரிகின்றது. உவமை யாகக் கூறிய காம்பு ஆடைக்கே பெயராக மாறியது. ஆதலின் சுந்தரர் கூறிய ஆடைகள் காம்பு என்ற சிறந்த துகிலும் நேத்திரம் என்ற பட்டும் எனத் தெளிவாகின்றது.

(தொடரும்)

## செம்மை நலம்

மாணிக்கவாசகப் பெருமான், திருவாசகம் திருக்கோவையாரில், திருவைந்தெழுத்து விளக்கமே செய்கின்றார். 'புன்புலால் யாக்கை' என்னும் திருவாசகப் பாடலில்,

"துன்பமே பிறப்பே இறப்பொடு மயக்காம்
தொடக்கெலாம் அறுத்தநற் சோதி
இன்பமே"

என்று, ஆண்டவன் குறிக்கப்படுகிறார்; இதுவும் திருவைந்தெழுத்தின் விளக்கமே.

'சிவாயநம' என்பதில், 'ம' துன்பம்; 'ந' சற்று ஒளியுடையதாதலின் உயிரின் சிறப்பியற்கையாகிய இறப்பு; மேல் நிலைக் கடப்பு'வா' மயக்கம் கலப்புத் தருவது; (முதலில் உலகத்தோடு கலந்து மறைப்பம்மையா யிருந்து பின்பு சிவசத்தியாய் மாறிச் சிவத்தோடு கலந்து சிவத்தின் பேரின்பத்துக்குத் துணை புரிவதாய் இங்ஙனம் இருவகைக் கலப்பும் உடையது.) 'சி' சிவத்தின் சிறப்பியற்கையாகிய செம்மை நலம்!

அழகரடிகள்

# மாரி வாயிலின் மாட்சி

[திருமதி. நா. உசாதேவி, எம்.ஏ.,

தமிழ்த்துணைப் பேராசிரியர், ம. தி. தா. இந்துக் கல்லூரி,
திருநெல்வேலி.]

முன்னுரை :

'மாரி வாயில்', என்பது, 'மேகத்தைத் தூதனுப்புதல்', எனப் பொருள்படும். சிற்றிலக்கிய வகையில், தூதும் ஒன்று. வடமொழியில் காளிதாசன் இயற்றிய 'மேக சந்தேசம்', இது போன்றது. பாண்டவருள் நடுப்பிறந்த பார்த்தனுக்கு, அவன் தமிழ் மனைவியான பாண்டியன் மகள், மாரியைத் தூதனுப்பிய தாக இந் நூல் கூறுகிறது. தூது என்ற தனிவகை சிற்றிலக்கியம் கலிவெண்பாவால் அமையும். தூது செல் என்று தலைவி அனுப்புவதோடு முடிவுறும். ஆயின் இந் நூல் விருத்தப் பாவால் அமைந்துள்ளது புதுமை. தலைவி செப்பிய காதற் செய்தியை எடுத்துக் கொண்டு மேகம் சென்றுரைத்ததும், அதைக் கேட்டவர் சொன்ன மாற்றங்கொண்டு, மீட்டு வந்துரைத்த செய்தியும் இந் நூலில் சேர்த்துள்ளார், புலவர். இதுவும் ஒரு புதுமையே. இதனைப் படைத்தவர், டாக்டர் நாவலர் திரு. ச. சோமசுந்தர பாரதியார் ஆவர். இந் நூல் 'தொட்டனைத்தூறும் மணற்கேணி போல,' நவில்தோறும் நூல்நயம் தரவல்லது.

பாட்டின் பொருள் :

பாண்டியன் மகளைப் பார்த்தன் மணந்து, பின் தணந்து சென்று விடுகிறான். பிரிவாற்றாத தலைவி குமரிப்பாக்கம் செல்கிறாள். அங்கே கன்னிக் கடவுளை வழிபட்டு நிற்கிறாள். கீழ் வானத்து அடிவாரத்தில் தேர்போலும் ஒரு காரைக் காண்கின்றாள். அதனைப் பார்த்தன் இந்திரனூருக்குச் சென்று மீளுந் தேரெனக் கருதிக் களிக்கின்றாள். பின்னர் அது தேரன்று, காரே எனத் தோழியால் அறிந்து மயங்குகிறாள். பிறகு அக் காரையே அழைத்துக் கணவன்பால் தூதனுப்பத் துணிகிறாள். மாரி, பார்த்தன் தந்தையாம் காரிக்கு (இந்திரனுக்கு) உரிய வாகனம். எனவே கொண்டலுக்கும், கொண்டவனுக்கும் உறவுண்டு என எண்ணுகிறாள். மேலும் வடிம்பலம்ப நின்ற பாண்டியனால் மாரி, மதுரையில் தளையிடப் பட்டது. பின்னர்ப் பாண்டியன் மகள் பார்த்தனை மணந்த

போது, தளைகளையப் பெற்றது. எனவே நன்றி மறவாமல், மாரி சென்று மீளும் என்றும் நினைக்கிருள். உடனே அவன் அம் மாரியை அழைத்து, தனிப்படர் மெலிவும், தணியாக் காதலும் சொல்லிக் கூட்டிவைக்குமாறு வேண்டுகிருள். செல்லும் வழியையும், அச் செல்லுக்குச் சொல்லுகிருள். பின் மாரியும், பார்த்தனிடம் சென்று பகர்கின்றது. அவனும் உவந்து கேட்டு, பகைசில வென்று, பின்னர், அவளைக் காண வருவதாகச் சொல்கிருன். மாரி மீண்டும் வந்து, அவளுக்கு அவனுரைத்த மாற்றம் உணர்த்துகின்றது. இதுவே இச் சிற்றிலக்கியம் கூறும் பொருளாகும். இருநூற்று இருபத்திரண்டு விருத்தப் பாடல்கள், இந் நூலில் அடங்கியுள்ளன. பாவலன் எதைச் சொல்கிருன் என்பதைவிட, அதை எப்படிச் சொல்கிருன். என்பதில்தான், பாவின் வெற்றி அமைந்துள்ளது. இம் மாரி வாயில் எப்படி அமைந்து, புலவரின் புலமைத் திறனைப் பறைசாற்றுகிறது என்பதைக் காண்போம்.

பாட்டின் விளக்கம்:

பாட்டு வெறும் பொழுதுபோக்கன்று; உணர்வுக்கு விருந்தாக அமைந்து, அலைந்து திரியும் மனத்தை அமைதிப் படுத்தி, ஒருநிலைப் படுத்தும் ஒளி விளக்காகும். 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்,' என்ற உயர்ந்த நோக்கோடு, தான் கண்டவற்றை, உணர்ந்தவற்றை அனைவர்க்கும் பொதுவாக்குகிருன் புலவன். 'எழுதிணையில் இரு பொருள் ஈந்த தமிழில்,' சிறந்த பாநலம் பொருந்தப் பாடப் பட்டதே இம் மாரிவாயில்.

சொல்லாட்சி:

'சொல்லுக்குச் சொல்லழகு ஏறுமடா,' என்று கவிமணி பாரதியின் சொல்லாட்சிச் சிறப்பைப் புகழ்வார். சிறந்த சொற்களைத், தகுந்த முறையில் அமைத்துப் பாடுவதில் வல்லவர் இப் பாவலர். இவரிடம் சொல்லுக்குப் பஞ்சம் இல்லை. 'எனை வைத்தி, எனை வைத்தி,' என்று சொற்கள் இவரிடம் முந்துகின்றன. பொருளின் ஆழத்தைத் தாங்க முடியாது, சொற்கள் நெளிகின்றன. சிறந்த செந்தமிழ்ச் சொற்களை இழைத்துச், சாணைபிடித்து, மின்னிப் பொலியச் செய்து தம் பாமாலையில் கோக்கிருர், புலவர்.

'நீடாழி உழுதோடி திரிதேடு நாவாய்கள்'

எனும் இவ் வரிகள், நெடிய கப்பல்கள், நீண்டதூரம் கடலினைக் கிழித்துக் கொண்டு செல்லும் காட்சியினை அப்படியே நம் மனக்

காட்சியில் விரியும்படி செய்கின்றன. பிரிந்த தலைவியின் நிலையினை,

'பேரையே பேறென் றெண்ணிப் பேதுறும் பேதை'

என்கிறார். சொற்சிலம்பம் ஆடுவதிலும் வல்லவராய் விளங்கு கிறார், புலவர்.

"பலவொன்று சிறுமந்தி, பலவொன்று கடுவன் பறித்தோர் பலாப்
பல, நீவிர் பொதுவுண்மின் எனவூடு பொதியிற் பழம்போதி காண்"

'பலவாக ஒன்றிய சிறு மந்திகளுக்கு, ஒரு பலாக் கனியை ஆண் குரங்கு பறித்துக் கொண்டு, இஃது ஒப்பற்ற பலாப்பழம் ஆதலின் நீர் பங்கிட்டு உண்மின் என மந்திகள் ஊடும் பொதிய மலை', என்பது இப் பாடலின் கருத்து. இதில், 'பலவொன்று', என்ற சொற்றொடர் இரு பொருள்பட அமைந்துள்ள நயம் இன்புறுதற்குரியது.

"துறைதோறுறு நலமேவுற மறையோரொடுந் தோன்றித்
துறையார்தமிழ் மறைசொற்பொருள் தருமெய்ப்பயன் சொரியும்
துறைசார்ந்துறை யிறையென்னிறை மனமுங்கவர் தொழிலில்
துறைபோயொரு துவரைச்சிறு மிக்கென்றனைத் துறந்தான்.''

எனவரும் பாடல், அவரது சொல்லாற்றலுக்கு மற்றுமோர் எடுத்துக்காட்டு. 'துறைதோறும் நலம் காண மறையாரொடும் வந்து, அகப்புறப் பொருள்களின் துறை சான்ற தமிழின் மெய்ப் பயன் எல்லாம் தரும் இடத்தினை அடைந்து, இறையாம் அர்ச்சுனன் என் மனமும், நிறையும் கவரும் தொழிலில் தேர்ந்து, பின் சுபத்திரைக்காக என்னைத் துறந்தான்,' என்று பாண்டியன் மகள் மாரியிடம் கூறுகிறாள். துறை—இறை—நிறை எனப் பயின்று வந்த சொல்லழகு நம் நெஞ்சைக் கவர் கின்றது. சொற்பொருட் பின்வரு நிலையணியாக இச் செய்யுள் அமைந்து நல்லின்பம் தருகிறது.

ஓசைநயம் :

'ஓசை தரும் இன்பம் உவமையிலா இன்பம்', என்பார் பாரதி. இது பற்றியே பாடலை, "செவிநுகர் கனி," எனக் கம்பர் குறிப்பிடுவார். 'இசையுடன் நினைப்பதே பாடல்', என மேனாட்டறிஞர் கார்லைல் குறிப்பிடுவதும் இங்குக் குறிக்கத்தக்கது.

"கொட்டியென ஆம்பலென நெய்தலெனக் குரகம்
ஒட்டியொரு வாதலவும் ஊருணியும் துதையும்"

"காவிரிவெள் ளாறுவிரி பாலாறு
பெண்ணையெனக் காம்பு நாலாய்
பூவிரிதன் புனனாட்டைச் சுரந்தூட்டும்
மடியுடைய பொற்பி னல்லான்
பாவிரிசெந் தமிழ்தழுவி நீண்மலயப்
பயனீனத்தும் பம்பும் நாட்டில்
நாவிரிபுள் ளினமிழற்றும் பண்ணார்ந்து
நில்லாது நடப்பை விண்ணே"

என்று வரும் நாட்டு வண்ணனைப் பகுதிகள் இழுமென் ஓசை யொடு அமைந்துள்ளன.

உவமை நயம் :

உவமை ஒரு பொருளை விளக்கியும் காட்ட வேண்டும்; மிகவுயரிய தூய்மை நிலையைத் தந்து, பாடலுக்கு அணியாக அழகு செய்யவும் வேண்டும். புதுப்புது உவமைகளை எடுத்தாளும் திறனைக் கொண்டே, நாம் புலவனின் புலமைத் திறனை எடை போட முடியும். இந்நூல் முழுதும் எண்ணற்ற உவமைகளைக் காணலாம். சான்றுக்கு ஒருசில காண்போம்.

'என்றுமுள தென்றமிழ்போற், பரம்பொருள் போல்
எல்லையறு கால மெல்லாம்
நின்றுவள நிலமுட்டுந் தொல் கங்கை'

என்று கங்கையாற்றைத் தமிழுக்கும், பரம்பொருளுக்கும் ஒப்பிடு கிறார்.

'கொடுமனத்தர் இருளுளத்தை அளந்தாழுங்
குடகடல்சூழ் குடகின் பாங்கர்
நடுமனத்தர் நேர்மைநெறிச் சால்புயர்வு
நனிகாட்ட நிற்கும் நல்ல
நெடுமலை'

என்று கடலின் ஆழத்திற்குக் கொடியோர் மன இருளையும், மலையின் உயர்வுக்கு நேர்மையாளர் சால்பையும் உவமை காட்டுகிறார்.

"யவனர்நற் சிலையின் மேனி யாணரோ வியம்போல் வண்ணம்
நவநனி யெழில்கள் நல்கும் நளினவாண் முகத்தி லோத்த
உவமனில் விழியான்........"

என்று பார்த்தனின் மேனியழகை வியந்து பாடுகிறாள், தலைவி.

**இயற்கைப் புனைவு:**

'இயற்கை அழகில் உள்ளம் பறிகொடுப்பவன்,' பாவலன். விரிந்து, பரந்து கிடக்கும் இயற்கை, 'என்னைப்பாடு, என்னைப் பாடு', எனப் புலவனைத் தூண்டுகிறது.

"என்னை நான் இழந்தேன்—இன்ப
உலகத்தில் வாழலுற்றேன்"

என்று பாரதிதாசன் பாடுவது போல, இப்பாவலர் தன்னை ஆட்கொண்ட இயற்கை ஓவியத்தைத் தம் சொல்லோவியத்தில் படைக்கிறார்.

"வடுகினில் முரலும் வண்டும்
தமிழ்தருங் குயிலும் வந்து
நெடுமலைச் சாரல் தோறு
மித்தமும் இசைப்பக் கேட்டுக்
கொடுநுதிக் கொவ்வைச் செவ்வாய்
கிஞ்சுகங் கொஞ்சும் கோல
அடுசுவைப் பாவின் இன்சொல்
அரம்பையர் விரும்ப வம்மா"

என்று இயற்கையில் நிகழும் இசைவிருந்தை, நம்முணர்வுக்கு விருந்தாய் இங்குப் படைக்கிறார்.

"மாய்தரும் வளமங் கோரா மலையினில் இயற்கைத் தெய்வம்
காய்தரும் வெயிலின் வெம்மை கண்டறி யாத கானில்
வேய்தரும் குழற்கால் ஊத மென்சிறை மிழற்ற வெற்பிற்
சேய்தருங் கலுழி பாடச் சிறந்தர சிருக்கு மம்மா"

என்று இயற்கை அரசு கொலுவீற்றிருக்கும் காட்சியினைக் காட்டுகிறார்.

———

"குழலின்னிசை வண்டின்னிசை கண்டுகுயில் கூவும்
மிழலின்னெழில் தாழ்ந்தபொழில் சூழ்ந்தமின்றியூரில்
அழலின்வலன் அங்கையது வேந்தியனலாடும்
சுழலின்னொலி யாடுப்புரி கடவுள்களை கண்ணே.

—அப்பரடிகள்

## கழக ஆட்சியாளரின் முத்துவிழா

## வாழ்த்துச் செய்திகள்

"எந்த அளவுகோலின் அடிப்படையில் பார்த்தாலும், எந்தக் கொள்கைக் கோணத்திலிருந்து அணுகினாலும் ஒரு பல்கலைக் கழகத்தினும் மேலான பணி தமிழுக்குச் செய்த செம்மல்...திரு. பிள்ளை அவர்களின் ஆசைகள் அளவிறந்தன; கனவுகள் எண்ணில்லாதன. அனைத்தும் தமிழ்மொழியையும், தமிழினத்தையும், அவற்றின் வாழ்வையும் பற்றியனவே... ஆசைகள் அனுபவங்களாக மாற அயராது உழைக்கும் அவர்கள் பணி முடிவற்றது... செய்த பணிகள் சிறந்தன எனினும், இனிச் செய்ய இருப்பன இன்னும் சிறந்தன."

டாக்டர். வா. செ. குழந்தைசாமி,
*தொழில் நுட்பக் கல்வி இயக்குநர்*

"அவர் இதுவரையில் தமிழ் செழிக்கச் செய்துள்ள பணிகள் தாம் எத்துணை! 'கன்னற் - பொருள் தரும் தமிழே நீ ஓர் - பூக்காடு; நானோர் தும்பி' எனத் துறைதொறும் நுழைந்து தமிழுக்கு ஆக்கம் தேடியுள்ளார்.

*'என்னை நன்றாக இறைவன் படைத்தனன்*
*தன்னை நன்றாகத் தமிழ்செய்யு மாறே'*

என்னும் திருமூலரின் கூற்று பிள்ளையவர்களுக்கும் பொருந்தும்.

*'தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்*
*தோன்றலிற் றோன்றாமை நன்று'*

என்ற பொய்யா மொழிக்கு ஏற்பத் தாம் எடுத்துக்கொண்ட பதிப்புத்துறை தம்மால் பெரும்புகழ் பெறச் செய்துள்ளார்."

தே. பெ. சு. பழனிசாமி, பி.ஏ., பி.எல்.,
*குற்றத்துறை நடுவர், கிருட்டிணகிரி.*

### ஈடுண்டோ!

எண்பத்தோர் ஆண்டிற்குள் ஏற்ற தமிழ்த் தொண்டை
எண்ணுங்கால் ஈடுண்டோ! சுப்பையா—எண்ணிய
எல்லாம் எளிதெய்தி ஏற்றமுடன் வாழியவே
பல்லாண்டு பல்வளமும் பெற்று.

முதறிஞர் கு. கோதண்டபாணி பிள்ளை,
*திருச்சேறை.*

## நம்
## அண்ணல்—தமிழ்க்—கன்னல்

[புலவர் பொ. முனியப்பன், கூகலூர்]

1. தமிழ்ப்பணியை மேற்கொள்ளும் தன்மை—வாழ்வில்
தளர்வகற்றி இளமைதரும் உண்மை—தாழ்வில்
தலையுண்டு வலைப்பட்ட
தமிழர்களை மீட்பதற்கே
வந்தார் - நூல்கள் - தந்தார்

அமிழ்துநிகர் தமிழ்மொழியின் மேன்மை—உணரா
அனைவர்க்கும் உரைத்ததன்றோ ஆண்மை—மனதால்
அருஞ்செயலால் தரும் உரையால்
பெருமையுறத் திருவிளைத்த
மாந்தர் - பதிப்பு - வேந்தர்

2. முத்துவிழா காண்கின்ற முனைவர்—தூய
முத்தமிழ்நூல் படைப்பவர்க்குத் துணைவர்—ஆய
முயற்சியினால் பயன்விளைத்துத்
துயரகற்றும் இவரே நம்
அண்ணல் - தமிழ்க் - கன்னல்

இத்தரைக்குத் தக்கவற்றை உதவி—தமிழை
எத்திக்கும் பரப்பல்இவர் பதவி—சிமிழாய்
இலங்குஞ்சீர் சுப்பையா
என்றென்றும் இவ்வுலகில்
வாழ்க - வாழ்நாள் - நீள்க.

## ஏர்சான்று வாழி இனிது!

எண்பத்தோ ராண்டின்மேல் எண்ணூறு கோடியுகம்
மண்புகழ மாமகிழ்வாய் வாழியவே—பண்பொத்த
பல்லா யிரநூல்கள் பண்பாய்ப் பதிப்பித்த
வெல்புகழ்சேர் சுப்பையா வேள்.

மனக்கவலை யின்றி மனமகிழ்ச்சி பொங்கத்
தனக்குவமை தானேயாத் தன்மை—வனப்புமிகு
சீர்சான்ற சுப்பையா வேளண்ணல் செயருளால்
ஏர்சான்று வாழி யினிது.

பேராசிரியர் ந. சேதுரகுநாதன்,
விருதுநகர்

# மேதகு ஆளுநரின் பாராட்டு

On the auspicious day of lights Deepavali I was lucky to visit this great house of lights.

I experienced wonderful time here. The Goddess of Saraswati was smiling throughout, magnificient collection. I feel privileged to be in this noble institute of learning. I am glad that large number of readers and research scholars are taking advantage of this library. May god inspire many to learn new things for the benefit of the community. I heartily congratulate the committee which is doing this work with dedication, devotion and intense love of learning.

(Sd)

10—11—77.

Prabhudas Balubhai Patwari,
Governor of Tamilnadu.

விளக்குத் திருநாளாம் இத் தீபாவளி நன்னாளில் விளக்குகளின் இல்லமாகத் திகழும் இந் நூலகத்தை நான் பார்வையிட நேர்ந்ததைப் பெருவாய்ப்பாகக் கருதுகிறேன்.

இங்கே என் பொழுது வியத்தகு வகையில் பயன்பட்டதை உணர்ந்தேன். கல்விக் கடவுள் கலைமகளின் புன்னகை நூலகத் தொகுதிகள் முழுவதிலும் ஊடுருவி நிற்பதைக் கண்டேன். பெருமை மிக்க இக் கல்வி நிலையத்திற்கு இன்று வர நேர்ந்தது என் பெரும்பேறுதான். பெருவாரியான வாசகர்களும் ஆராய்ச்சிப் பேரறிஞர்களும் இந் நூலகத்தை நன்கு பயன்படுத்துவதறிந்து நான் மகிழ்ச்சியடைகிறேன். இதனை மேலும் பலர் பயன்படுத்திச் சமுதாயத்தின் மேம்பாட்டிற்காகப் புதிய பல செய்திகளை அறிந்துகொள்ள இறைவன் அருள்புரிவானாக. இப் பணியைத் தொண்டுள்ளத்துடனும் கடமையுணர்வுடனும் கல்வியில் ஆழ்ந்த பற்றுடனும் சிறப்பாக நடத்திவரும் குழுவினரை நான் உளமாரப் பாராட்டுகிறேன்.

—பிரபுதாஸ் பலுபாய் பட்வாரி
தமிழக ஆளுநர்.

10—11—77

குறிப்பு: ஒரு நூற்பதிப்புக் கழகம் 1920 இல் நிறுவப் பெற்று 1600-க்கு மேற்பட்ட பல துறை நூல்களை அழகுற வெளியிட்டுப் பல பரிசுகள் பெற்றிருப்பதும், 'செந்தமிழ்ச் செல்வி' என்னும் இலக்கியத் திங்கள் இதழை 52 ஆண்டுகளாக நடத்தி வருவதும், பேழைகள் வழிச் சங்க காலம், பிற்காலம், சமயம், பள்ளி மாணவர் என்ற தலைப்புகளில் நூல்களைத் தொகுத்து வழங்கி வருவதும், ஆராய்ச்சியாளர்கட்குப் பயன்படும் வகையில் பலதுறை நூல்களும், இதழ்களும், மலர்களும் தொகுக்கப் பெற்று நூல்நிலையத்திலே அணியணியாக வைத்திருப்பதும், திருக்குறளில் பல்வேறு மொழிபெயர்ப்பு நூல்களைத் தொகுத்து வைத்திருப்பதும் மேதகு ஆளுநர் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்துள்ளன.

# செய்திகளும் குறிப்புகளும்

## திருக்கோயில் வரலாறுகள் பற்றி முதல்வர் கருத்து

"ஆலய நூல் நிலையங்களில்கூட அந்தந்த ஆலயங்களின் வரலாற்று நூல்கள் காணப்படவில்லை. இது வருந்தத் தக்கது. ஆலயங்களின் வரலாற்றை எழுதுவதற்கெனத் தமிழ் அறிஞர் குழு வொன்று அமைக்கப் படும். இத் திட்டத்தின்கீழ் முதலில் மதுரை மீனாட்சி கோயிலின் வரலாற்றினை எழுதும் பணி மேற்கொள்ளப்படும்" என்று 22-10-77 இல் சென்னையில் நடைபெற்ற ஆசிரியர்களுக்கு விருது வழங்கு விழா விற்குத் தலைமை தாங்கிய தமிழக முதல்வர் மாண்புமிகு எம். ஜி. இராமச் சந்திரன் பேசியுள்ளார்.

முதல்வரின் இக் கருத்து வரவேற்கத் தக்கதே. ஆனால் கோயில் களுக்கு வரலாறுகள் இல்லையென்று சொல்வதற்கில்லை. இருக்கின்றன. அவை தல வரலாறுகள் என்னும் பெயரில் முன்னரே உள்ளன. சமய நூல்களில் இவற்றைக் காணலாம். நமது சை. சி. நூற்பதிப்புக் கழகம் இத்துறையில் வெளியிட்டுள்ள நூல்களிலும் கோயில்களின் வரலாறுகள் அடங்கியுள்ளன. மேலும் அவை பரவலாக மக்கட்குக் கிடைக்கும் வகை செய்ய வேண்டுவது அரசியலார் கடனாகும்.

## மலையாளத்தின் மாண்பு பற்றி ஆளுநர் சோதி வெங்கடாசலம் அவர்களின் கருத்து

"பண்டைக்காலந் தொட்டுக் கேரளம் பலவகை இன, மொழி, கலை, பண்பாடு, சமயம் ஆகியவற்றின் உறைவிடமாக இருந்து வந்திருக் கின்றது. இதனால்தான் மேலை நாட்டு ஆசிரியர்கள் இந் நாட்டின் மொழி, வரலாறு, இலக்கியம் ஆகியவற்றைக் கற்பதில் பெரிதும் ஆர்வங் கொண்டனர். பேராசிரியர் குண்டர்ட் என்னும் செருமானியர் தாம் முதன் முதலில் மலையாள மொழிக்கு அகர முதலி எழுதினார். திரு. லோகன் என்னும் ஆங்கில ஆசிரியர் 'மலபார் மேனுவல்' என்னும் வட கேரளத்தின் புகழ் பெற்ற வரலாற்று நூலினை எழுதினார்" என்று 1-11-77 இல் திருவனந்தபுரத்தில் நடைபெற்ற உலக மலையாளிகள் மாநாட்டைத் தொடங்கி வைத்துப் பேசிய கேரள ஆளுநர் சோதி வெங்கடாசலம் அம்மையார் குறிப்பிட்டார்.

## தமிழகப் புலவர் குழுவின் 43-வது கூட்டமும் தொல்காப்பிய மாநாடும்

தமிழகப் புலவர் குழுவின் 43-வது கூட்டமும், தொல்காப்பிய மாநாடும் முறையே கடந்த அக்டோபர்த் திங்கள் 22, 23 ஆம் நாள்களில் திருச்சியில் நடைபெற்றன. டாக்டர் முத்து கண்ணப்பர் தலைமையில் நடைபெற்ற புலவர் குழு கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங் களுள் தொல்காப்பிய கருத்துக்களைப் பரப்புவதற்கென ஓர் ஆய்வரங்கம்

ஏற்படுத்த வேண்டும் என்னும் தீர்மானமும், சென்னை வள்ளுவர் கோட்டத்தில் திருக்குறள் ஆய்வுத்துறை ஒன்றினை ஏற்படுத்தி நிலையான திருக்குறள் கருத்துக்களை பரப்புப்பணி மேற்கொள்ளப்பட வேண்டும் எனத் தமிழக அரசைக் கேட்டுக் கொள்ளும் தீர்மானமும் குறிப்பிடத் தக்கவை.

## தொல்காப்பிய மாநாடு

23-10-77 இல் திருச்சியில், தமிழகப் புலவர் குழுவின் சார்பில் தொல்காப்பிய மாநாடு சீரும் சிறப்புமாக நடைபெற்றது. இம் மாநாட்டினையொட்டி 23-10-77 காலையில் திருச்சி தெப்பக்குளத்தி லிருந்து ஊர்வலம் ஒன்று புறப்பட்டது. அவ்வூர்வலத்தில் தொல் காப்பியர் படமும், தொல்காப்பிய நூல்களும் யானைமீது வைத்து எடுத்துச் செல்லப்பட்டன. தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்து வந்த புலவர் பெருமக்களும் அறிஞர்களும் கலந்து கொண்டனர். ஊர்வலம் மேலரண் சாலை வழியாகத் தேவர் மண்டபத்தை அடைந்தது. 9.30 மணியளவில் புலவர் சிவக்கொழுந்து இறை வணக்கம் பாடியபின் மாநாடு துவங்கிற்று.

முத்தமிழ்க் காவலர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் வரவேற்புரை நிகழ்த்தினார். டாக்டர் வ. சுப. மாணிக்கம் தலைமை தாங்கினார். உயர் நீதிமன்ற நடுவர் எம். எம். இசுமாயில் அவர்கள் தொடக்க உரையாற்றி னார்கள். ஓய்வு பெற்ற மாவட்ட ஆட்சியாளர் திரு. கோ. முத்துசாமி பிள்ளை தொல்காப்பியர் படத்தைத் திறந்து வைத்தார். டாக்டர் ந. சஞ்சீவி, டாக்டர் மெ. சுந்தரம், டாக்டர் சி. பாலசுப்பிரமணியம், பேராசிரியர்கள் திரு. க. வெள்ளை வாரணனார், கு. சுந்தரமூர்த்தி, ஆபிரகாம் அருளப்பன் ஆகியோர் சொற்பொழி வாற்றினர்.

## சைவசித்தாந்தப் பேரறிஞர்க்குப் பொருட்கொடை

மதுரைப் பல்கலைக்கழகச் சைவசித்தாந்தத் துறைத் தலைவராகப் பணியாற்றி வரும் சித்தாந்தப் பேராசிரியர் திரு. க. வச்சிரவேல் முதலி யார் பி. ஏ. எல். டி. அவர்களின் குடும்பநல உதவியாகப் பொருள் திரட்டி வழங்க அன்பர்கள் சிலர் திட்டமிட்டுள்ளனர். பொருள் உதவி செய்ய விரும்புவோர் சி. இராம. நாகப்பன், 85, எ. இராமநாதபுரம் சாலை, மதுரை-9. என்னும் முகவரிக்கு விடுக்குமாறு வேண்டப்பெறு கின்றனர்.

## பாவலர் புத்தனேரி ரா. சுப்பிரமணியம் ஓய்வு பெற்றார்

தமிழ்நாட்டு அரசுப் பொதுப்பணித் துறையில் முதல் நிலை ஆட்சி அலுவலராகப் பணியாற்றி வந்த தமிழ் நற்பெருந் தொண்டர், கலைமா மணி, கவிஞர்கோ புத்தனேரி சுப்பிரமணியம் அவர்கள் ஐம்பத்தைந் தகவை நிறைவுற்றுப் பணியிலிருந்து ஓய்வு பெற்றுள்ளார். திரு. சுப்பிர மணியம் அரசுப்பணிக்குச் செல்லுமுன் 1941 இல் சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தில் ஓராண்டுக்காலம் எழுத்தராகப் பணியாற்றியவர் களாவர். அரசு அலுவலினின்றும் ஓய்வு பெற்றுள்ள அவர் தமிழ்ப் பணியில் முனைந்து ஈடுபடவிருப்பதாகத் தெரிவித்துள்ளார்.

## கலைமகள் கல்வி நிலையம், ஈரோடு

அருள்நெறிச் செல்வர் மீனாட்சி சுந்தரனார் அவர்களின் பெரு முயற்சியால் நிறுவப்பட்டுக் கடந்த பல ஆண்டுகளாக நன்முறையில் இயங்கிவரும் கலைமகள் கல்வி நிலையம் பெரிதும் பாராட்டப்படத் தக்க தாகும். "இக் கல்வி நிலையத்திற்கு ஒருசிறு துரும்பளவேனும் உதவி செய்பவரின் பாதம் என் தலைமேல்" என்னும் மீனாட்சி சுந்தரனார் அவர் களின் கூற்று, அவர்கள் பண்பாடு வாய்ந்த குடிமக்களை உருவாக்கும் இக் கலைமகள் கல்வி நிலையத்தின்பால் கொண்டிருந்த ஈடுபாட்டையும் அக்கறையையும் விளக்கும்.

## இந்தி மேலாண்மை பற்றிக் கேரள முதல்வர் கருத்து

"நடுவண் அரசிலிருந்து வரும் சுற்றறிக்கைகள் அனைத்தும் இந்தி யிலேயே வருகின்றன. இது வருந்தத்தக்கது. முன்பெல்லாம் இப்படி யில்லை. இந்தி பேசாத மாநிலங்களுள் இந்தி பயில்வதில் கேரளம் முன்னணியில் நிற்கிறது. அப்படிப்பட்ட நிலையில் இந்தி இப்படி வலிந்து திணிக்கப்படுமானால் அதனால் வேண்டாத விளைவுகளெல்லாம் ஏற்படும். இதற்கு நடுவண் அரசு இடங்கொடுக்கக் கூடாது" என்று அண்மையில் கேரள முதல்வர் திரு. ஏ. கே. அந்தோணி கருத்து தெரிவித் துள்ளார்.

## வடவரும் தென்னிந்திய மொழிப் பயிற்சியும்

வட இந்தியாவைப் பொறுத்த வரையில் மும்மொழித் திட்டம் உருப்படியான பலனைத் தரவில்லை. தென்னிந்திய மொழிகளைக் கற்க வேண்டும் என்ற அக்கறை அவர்களுக்கு இருப்பதாகத் தெரியவில்லை. இந்தியைத் திணிக்க இத் தென்னாட்டில் செய்யப்படும் முயற்சிகளில் ஒரு சிறிது வடநாட்டில் செய்யப்பட்டாலே போதும். மும்மொழித் திட்டம் அங்கு மூன்றே ஆண்டுகளில் நல்ல பலனைத் தரும்.

வட இந்தியக் கல்லூரிகளிலும் பள்ளிகளிலும் தென்னிந்தியமொழிப் பயிற்சி பற்றிய அறிக்கை ஒன்றை வெளியிட்ட திராவிட மொழிக் குழுவினர் அண்மையில் இந்தக் கருத்தைத் தெரிவித்துள்ளனர். திராவிட மொழிக் குழுவின் துணைத் தலைவர் திரு. வி. ஐ. சுப்பிரமணியம் அவர்கள் அண்மையில் இவ்வறிக்கையினை வெளியிட்டார்.

மும்மொழித் திட்டம் என்ற பெயரில் கோடிக் கணக்கில் பணத்தைச் செலவிடுவது மட்டுமன்றி, தென்னாட்டவர் மட்டும் இந்தியை வருந்திப் படிக்க வேண்டும். வடவருக்கு அந்தக் கவலை இல்லை என்ற நிலையும் தென்னிந்திய மொழிகள் புறக்கணிக்கப்படுகின்ற நிலையும் மிகமிக வருந்தத்தக்கன.

## திரு. தமிழ் வாணன் மறைவு

'கல்கண்டு' என்னும் கிழமை இதழின் ஆசிரியரும் ஏராளமான நூல்களை எழுதியவருமான திரு. தமிழ் வாணன் அவர்கள் தமது 51 ஆவது அகவையில் 10-11-77 அன்று மார்படைப்பால் கால

மாணர் என்ற செய்தி அறிந்து வருந்துகிறோம். இவர்தம் இயற்பெயர் லெ. இராமநாதன் என்பதாகும். இவருக்கு ஆண் மக்கள் இருவரும் பெண் மக்கள் இருவரும் உளர். இவரை இழந்து வருந்தும் இவர்தம் மனைவி மக்கள் உற்றார் உறவினர் நண்பர்கள் ஆகியோர்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் சிலம்பு-உ, க0ச ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | |
|---|---|
| கழக ஆட்சியாளர் உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் அக்டோபர். 77 நன்கொடை | 100-00 |
| கழக மேலாளர் உயர்திரு. ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் அக். 77 நன்கொடை | 5-00 |
| திரு. மா. காசிவிசுவநாத பிள்ளை அவர்கள், திருச்சி | 21-00 |
| திரு. ப. சுந்தரேசனார், கும்பகோணம் | 10-00 |
| பேராசிரியர் திரு. சொல்விளங்கும் பெருமாள், மதுரை | 36-00 |

## திருவாட்டி செல்வம் இளங்குமரன் அம்மையார் மறைவு

செந்தமிழ்ப் புலவரும் கழக நூலாசிரியருமான மதுரை இளங்குமரனார் அவர்களின் இல்லறத் துணைவியார் திருவாட்டி செல்வம் அம்மையார் தம் 45 ஆம் அகவையில் கடந்த 25-10-77 அன்று இறைவன் திருவடி நீழலெய்தினர். தம் பதினான்காம் அகவையில் பதினாறு அகவை இளங்குமரனாருக்கு இல்லறத் துணையான செல்வம் அம்மையார் முப்பத்தோராண்டுகள் சிறப்புற வாழ்ந்து கணவனார்க்குப் பெருமை சேர்த்தார். இளங்கோ, பாரதி என்னும் ஆண்மக்கள் இருவரையும் பெண்மக்கள் இருவரையும் ஈன்று புரந்தார்.



இளங்குமரனாரின் பணிகள் - வளர்ச்சிகளின் ஒவ்வோர் அணுவிலும் செல்வம் அம்மையாரின் பங்கு மிகுதி. அருமைத் துணைவியாரைப் பிரிந்து வருந்தும் புலவர் இளங்குமரனார்க்கும், அவர்தம் குடும்பத்தார்க்கும் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். அம்மையாரின் இன்னுயிர் அமைதியுற அம்மையம்பலவாணர் திருவடி மலர்களை இறைஞ்சுகின்றோம்.

"செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே!"

## மனைவிளக்கு

புலவர் இரா. இளங்குமரன் இயற்றியது

### 13. இறுதி வெற்றி

நோய் வெல்லுமா? மருந்து வெல்லுமா?

வலியது எதுவோ அதுவே வெல்லும்
மெலியது எதுவோ அதுவே தோற்கும்
பிணியின் போக்கெனப் பிறிதொரு விதியோ! இல்லை
ஒருகால் தோல்வி; ஒருகால் வெற்றி;
இரண்டும் மாறிமாறி நடப்பது உலகியல் காட்சி;
எனினும் முடிந்தவெற்றி நோய்க்கே;
மருந்து தோற்றே போகும்;
மருந்து தோற்றல் இயற்கை நியதி;
நோயே வெல்லும் இயற்கையின் நியதி; ஏனெனில்
ஊனுடல் ஒழியாது எவரே இருந்தனர்?

குறிப்பு: க. உருவக மாலையில் 16 தலைப்புக்களில் பாக்களும், உ. பண்பியல் மாலையில் 16 பாக்களும், ௩. இரங்கல் மாலையில் 16 பாக்களும் உள்ளன.

## திருக்குறட் செல்வன்

6 ஆவது வகுப்பில் படித்துவரும் 9 அகவை நிரம்பாத சிறுவன் இரா. ஈசுவரன் திருக்குறள், நாலடியார், அபிராமியந்தாதி, கந்தரனுபூதி ஆகிய நான்கிலும் அவதானம் செய்து வருகின்றான். இப்போது மெய் கண்டார் சிவஞான போதத்திலுள்ள அதிகாரம், 2, இயல் 4, சூத்திரம் 12, அதிகரணம் 39, வெண்பாக்கள் 81 ஆகியவற்றிலும் அவதானஞ் செய்யப் பழகிவருவது மகிழ்ச்சிக்குரியதாகும்.

## மறைமலையடிகளார் நூல் நிலையத்திற்குத் தமிழக ஆளுநர் வருகை

10—11—77 இல் தமிழக ஆளுநர் மாண்பமை பிரபுதாஸ் பலுபாய் பட்வாரி அவர்கள் 11 மணியளவில் மறைமலையடிகளார் நூல் நிலையத்திற்கு வருகை தந்தனர். அவர்களைக் கழக ஆட்சியாளர் உயர்திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் மாலையிட்டு வரவேற்றார்கள். பொது மேலாளர் திரு. இரா. கலியாண சுந்தரம், நூலகர் திரு. இரா. முத்துக் குமாரசாமி, மற்றும் கழக ஆட்சிக் குழுவினர்கள், ஓய்வு பெற்ற தலைமைப் பொறியர் திரு. சே. பா. நமசிவாயம், ஓய்வு பெற்ற சட்ட மன்றச் செயலர் திரு. மா. சண்முக சுப்பிரமணியம், கல்லூரிக் கல்வித் துணை இயக்குநர் திரு ஆளுடைய பிள்ளை ஆகியோர் அவரை வர வேற்றனர். ஆளுநர் நூலகத்தைச் சுற்றிப் பார்த்துத் தமது பாராட்டு தலைத் தெரிவித்தார்.

# மதிப்புரை

## பாவேந்தர் ஊட்டிய தமிழுணர்வு

*[ஆசிரியர் : க. தமிழமல்லன், வெளியீடு : பொ. கண்ணையன், 168, மாரியம்மன் கோயில் வீதி, தட்டாஞ்சாவடி, புதுச்சேரி—605009, விலை : 60 காசு.]*

புரட்சிப் பாவேந்தர் பாரதிதாசனார் ஊட்டிய தமிழுணர்வை எடுத்துக் காட்டி விளக்குவதே இந்நூல். இதன் வழித் தமிழுணர்வை வளர்ப்பதே தம் நோக்கம் என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். தெளிவான தமிழ் நடையில் பாவேந்தர் பாடல் மேற்கோள்களுடன் நூல் அமைந்துள்ளது. இந் நூலுக்குப் பாவலரேறு பெருஞ்சித்திரனார் பாவடிவில் அணிந்துரை வழங்கியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

## மங்கல மனைமாட்சி

*[ஆசிரியர் : பர். ந. சஞ்சீவி, வெளியீடு : அருள் வாழ்வுப் பதிப்பகம், தலையாரித் தெரு, மயிலாப்பூர், சென்னை 600004, விலை: ரூ. 3-75.]*

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் பர். ந. சஞ்சீவி அவர்கள் எழுதிய 'மங்கல மனைமாட்சி', திருமணங்கள் பழமையும் புதுமையும்' என்னுங் கட்டுரைகளும், பேராசிரியை கிருட்டிணா சஞ்சீவி அவர்கள் எழுதிய 'பிள்ளை வளர்ப்பு', 'தாயும் மகளும்' ஆகிய கட்டுரைகளும் அடங்கியதே இந்நூல். இல்வாழ்க்கை பற்றிய இலக்கண இலக்கியப் பகுதிகளும், 'பழமொழிகள் குடும்பத்தில் குடும்பப் பழமொழிகள்' என்னும் தலைப்பில் பழமொழிகள் சிலவும் பின்னிணைப்பாக உள்ளன. மணவிழாப் பரிசுக் குரிய நூலாகக் குறிக்கப்பட்டுள்ளது.

## பத்மாசினி-சுந்தரேசன் திருமணப் பொன்விழா மலர்

எழுத்தாளரும் செய்தித்தாள் விற்பனையாளருமான புதுக்கோட்டை திரு. பழ. சுந்தரேசன் அவர்களின் திருமணப் பொன்விழா மலர் பெருமக்கள் பலரின் வாழ்த்துரைகளோடும் பாடல்கள், கட்டுரைகளோடும் சிறப்புற அமைந்துள்ளது. திரு. சுந்தரேசன் அவர்கள் 6-12-1944 இல் மறைத்திரு மறைமலையடிகளாரால் வாழ்த்தப் பெற்றுள்ளார்கள். இப்போது வள்ளுவர் கோட்டத்தில் வரவேற்பு அலுவலராகப் பணியாற்றும் திரு. பழ. சு. செகதீசன் அவர்கள் இப் பெருமகனாரின் திருமகனார் ஆவர்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 2/140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.

ஆசிரியர் : வ. சுப்பையா.

பதிவு எண் : M. 4899

## கழகப் புதிய வெளியீடுகள்

### நமது உடலும் இயற்பியலும்

ஆசிரியர் : டாக்டர் லோக முத்துக்கிருட்டிணன்

இந்நூலில் நமது உடற் கூறுகளின் அமைப்புப் பற்றியும் அவற்றின் விந்தையான பணிகள் பற்றியும் கூறப்படுவதோடு இயற்பியலில் (Physics) பொறிகள் இயங்கும் முறைக்கும் நமது உடல் உறுப்புகளின் அமைப்பு இயக்கம் ஆகியவற்றுக்கு முள்ள ஒற்றுமைகள் விளக்கப்படுகின்றன. சிறுவர் படித்துப் பயன் பெறும் வண்ணம் விளக்கப் படங்களுடன் வெளி வந்திருக்கும் அழகிய பதிப்பு. ரூ. 7 50

### செய்தி இதழ்களின் கதை

ஆசிரியர் : பி. வி. கிரி

செய்தி என்றால் என்ன, செய்தித்தாள்கட்குச் செய்திகள் கிடைக்கும் முறை, செய்தித்தாள் அலுவலக நடைமுறைகள் ஆகியன இந்நூலில் இனிய எளிய தமிழில் பள்ளிச் சிறுரும் படித்துப் பயன்பெறும் வகையில் விளக்கப்பட்டுள்ளன.

ரூ. 3 50

### முருகன் திருவருள்—என்.கே. வேலன், பி.ஏ

இந்நூலில் திருமுருகப்பெருமானைப் பற்றிய பாடல்களும் முருகனின் திருவருள் பெற வழிகாட்டும் குறிப்புகளும், திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரனுபூதி, திருமுருகாற்றுப் படை ஆகிய நூல்களிலிருந்து சிறந்த புகழ்ப் பாடல்களும் தொகுத்துத்தரப்பட்டுள்ளன. ரூ. 5 50

### இலக்கிய மலர்கள்-ஆசிரியர்: மீ.ப.சோமசுந்தரம் (சோமு)

தமிழிலுள்ள இனிய தனிப்பாடல்கள் சில இதன்கண் அனைவரும் படித்துத் தமிழ்ச்சுவை அறியும் வண்ணம் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. படங்களுடன் கூடிய அழகிய பதிப்பு. எல்லா நூலகங்களிலும் இருக்க வேண்டிய நூல்.

ரூ. 4 50

### தமிழில் எழுதுவோம்—ஆசிரியர் : ஆட்சிச் சொற்காவலர் கீ. இராமலிங்கனார், எம்.ஏ.

இவ் ஆசிரியர் 'செந்தமிழ்ச் செல்வி'யில் தொடர்பாக எழுதிவந்த கட்டுரைகளின் தொகுப்பே இந்நூல். இதன்கண் புதுச்சொல் செய்முறை, பொதுவகைப் பிழைகளும் அவற்றின் திருத்தமுறைகளும் - தமிழில் இயலுமா இயலாதா என்னும் வினாவுக்கு விடை, இன்னபிற இன்றியமையாக் கருத்துக் களும் அடங்கியுள்ளன. பொது நூலகங்களிலும் ஆட்சித் துறை அலுவலகங்கள் அனைத்திலும் இருக்க வேண்டிய நூல்.

ரூ. 7 50

அப்பர் அச்சகம், சென்னை-1.